


அருள்

ஞானக் கருவூலம்

ஹலரத்

# அபூஹுரைரா (ரலி)

2/57, மெயின் ரோடு,
பொதக்குடி-614 103.

# அருள் ஞானக் கருவூலம்

## ஹலரத் அபூஹுரைரா (ரலி)

எம். எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்
125, இராமசாமித் தெரு,
சென்னை-600001

திருச்சிராப்பள்ளி-620 008.

''என்செய்திகளை எடுத்துரையுங்கள் — ஒரேயொரு சொற்றொடரேயாயினும் சரியே'' என அண்ணலார் நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் அருளினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களால் மொழியப் பட்டவை அவர்களால் செயல்படுத்தப் பட்டவை அவர்களால் அங்கீகரிக்கப் பட்டவை ஆகிய அனைத்தும் 'அல் ஹதீஸ்' என வழங்கப்படுகின்றன. அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ் நாட்களுக்குப் பின் ஹதீஸ்களை —அவர்களிடமிருந்து தாங்கள் கண்டவைகளை, கேட்ட வைகளை—அள்ளி வழங்கிய நல்லறத் தோழர்கள் ஓராயிரத்து முன்னூறு பேர்களில் முதலிடம் பெற்றவர் களே ஹலரத் அபூ ஹுரைரா ரலி யல்லாஹு அன்ஹு.

அவ்வோராயிரத்து முன்னூறு பேர்களில் ஒரேயொரு ஹதீஸை வெளிப்படுத்தியவர்கள் ஐந்நூறு பேர்கள். முதலிடம் பெற்று நிற்கும் ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ்களோ 5374.

ஹிஜ்ரி 7ம் ஆண்டில் அண்ணலார் (ஸல்) அவர்கள் கைபரில் போர் நடத்திக் கொண்டிருக்கையில் வந்து அவர் களைச் சந்தித்தவர்களே ஹலரத் அபூ ஹுரைரா (ரலி), அதற்கு முந்திய ஏறத்தாழ பத்தொன்பதாண்டுகால நபித்துவத் தோழமையை அவர்கள் இழந்து விட்டிருந்தார் கள். நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் நான்காண்டு காலத் தோழமையையே பெற்றிருந்தும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் தமக்கு முந்தியகால ஸஹாபாக்கள் அனைவரையும் விட அதிகமான ஹதீஸ்களை அறிவித்தது கண்டு வியப்படையாதார் இல்லை.

ஹதீஸ் அறிவிப்பாளர்களின் வரிசையில் ஹலரத் உமர் (ரலி) அவர்கள் 537 ஹதீஸ்களை மட்டும் அறிவித்து பத்தாவது இடத்தையும், அலீ (ரலி) அவர்கள் 536 ஹதீஸ்களை அறிவித்து பதினோராவது இடத்தையுமே வகிக்கிறார்கள். ஹலரத் உதுமான் (ரலி) அவர்களோ 147 ஹதீஸ்களை மட்டுமே வெளிப்படுத்தி 29 வது இடத்தையும், ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் 142 ஹதீஸ்களை மட்டுமே அறிவித்து 31வது இடத்தையுமே பெற்றிருக்கிறார்கள். இவர்களெல்லாம் ஹதீஸ்களை அறியாதவர்களல்லர். அண்ணலார் (ஸல்) அவர்களின் சொல்லுக்கு ஒரு சொல்லையும் கூட மாற்றமாக தாங்கள் வெளியிட்டு விடக் கூடாதே என்ற அச்சமே அவர்களைத் தடைப் படுத்தி விட்டது.

இஸ்லாத்துக்கு முன்னரும் பின்னருமாக ஏறத்தாழ நாற்பத்து மூன்றாண்டு காலம் அண்ணலார் (ஸல்) அவர்களோடு தோழமை பூண்டு அவர்களின் வாயுதிர் வளமொழிகள் ஐந்நூற்றைத் தொகுத்து எழுதி வைத்திருந்தும், ஓர் இரவு முழுதும் உறக்கமின்றி உழன்ற தம் தந்தை விடிந்தெழுந்ததும் அதனை எரித்து விட்டதாக ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் மகளார் ஆயிஷா நாயகியார் அறிவித்திருக்கிறார்கள்.

''என் நினைவில் இருந்தவைகளைக் கொண்டே அவைகளை நான் தொகுத்தேன். அவைகளில் ஒரு சொல் வேனும் அண்ணலார் (ஸல்) அவர்களின் சொல்லுக்கு மாறுபட்டிருக்குமோ என நான் அஞ்சுகிறேன்'' என அபூ பக்கர் (ரலி) அவர்கள் தாங்கள் அவ்வாறு எரித்து விட்ட தற்கான காரணம் விளக்கினார்கள்.

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வெளிப்படுத்தும் ஹதீஸ்களோ 'ஒவ்வொரு சொல்லும் அண்ணலார்

(ஸல்) அவர்களின் சொல்லுக்கு மாறுபடாதவைகளாக'வே இருக்க தாம் காண்பதாக ஆயிஷா (ரலி) அவர்கள் ஏற்றதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்களின்

1. அற்புத நினைவாற்றல்

2. மனனம் செய்ய அவர்கள் மேற்கொண்ட சிரமம்

3. அச்சிரமத்தை அவர்கள் ஏற்கக் காரணமாக, பெருமானார் (ஸல்) அவர்களிடத்தில் அவர்கள் கொண்டிருந்த பேரன்பு, பேணுதல் ஆகியவை மட்டுமல்ல அருளாய் அவர்களுக்கமைந்த முன்னுணர்வும் வியந்து போற்றுதற்குரியது.

மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் தாங்கள் இவ்வுலகைப் பிரிய நேர்ந்த பிந்திய காலத்தில் அருளினார்கள், "எனக்குப் பின்னர் நீங்கள் பற்றிப் பிடித்துக் கொண்டால் என்றுமே வழி தவறி விடமாட்டீர்களே அத்தகைய இரு பொருள்களை உங்களிடையே விட்டுச் செல்கிறேன். அவை அல்லாஹ்வின் திருவேதமும் என் வழிமுறைகளுமாகும்" என்று.

பெருமானார் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப்பின் அல்லாஹ்வின் வேதவசனங்களைத் திரட்டிச் சேர்க்க ஓரளவு எளிதாக முடிந்தது. ஏனெனில் அவைகள் எலும்புகளிலோ தோல்களிலோ மரப்பட்டைகளிலோ எழுதி வைக்கப்பட்டிருந்தன. ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளுரைகள் முழுமையாக எழுதிவைக்கப்பட்டிருக்கவில்லை. தங்கள் நெஞ்சக் கருவூலங்களில் அவைகளை நினைவால் நிலைப்படுத்தியிருந்தவர்களே தோண்டித் தோண்டி உலகுக்கு வழங்கினார்கள். அவ்வாறு, அள்ளி வழங்கிய அருள் ஞானக் கருவூலங்களில் முதலிடம் பெற்றவர்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

அருள் மறை குர்ஆனையடுத்து அண்ணலார் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களைக் கற்கும் ஆவலும் இன்று சமுதாயத்திடையே மிகைத்திருக்கிறது—அதுவும் இறைவனின் ஓர் அருளேயாகும். இறைவன் தன் அடியார்களில் எவர்களுக்கு நன்மையை நாடுகிறானோ அவர்களின் இதயங்களை நன்மையானவைகளின் பக்கம் திரும்பச் செய்கிறான். அத்தகைய ஆவல் மிகைத்தவர்களுக்கு முன் 'ஹதீஸ்'களைப் பாதுகாப்பாய்ச் சேமித்த 'அருள் ஞானக் கருவூலங்களின் வரலாறுகளை' வைக்க நாடிய என் முயற்சியின் முதற்படி இது. அடுத்துத்தொடர இறைவனின் பேரருளை யாசிக்கின்றேன்.

இதனை அச்சிட்டளித்த மில்லத் பிரிண்டர்ஸாருக்கு என் நன்றி உரித்தாகட்டும்.

கருணையுள்ள ரஹ்மான் இதில் நான் இழைத்துவிட்டிருக்கக் கூடிய குற்றங்களை மன்னித்தருள்வானாக, கற்றோர்களின் கண் கொண்டு குறைகளை நிறைவுபடுத்தியருள்வானாக.

எம். எஸ். முஹம்மது தம்பி

---

# அருள் ஞானக் கருவூலம்
# அபூ ஹுரைரா (ரலி)

திஹாமாவில் வாழ்ந்த 'தௌஸ்' என்ற அரபிக் கோத்திரத்தின் தலைவர் ஹலரத் துஃபைல் பின் அம்ரு (ரலி). தமது கவிதைத் திறனால் மக்களின் உள்ளங்களை ஈர்த்து நின்றவர். இரக்கச் சிந்தனையும் வள்ளன்மையும் கொண்ட அவரது அடுக்களை எக்காலமும் கனை கட்டி நின்றது. இரப்பவர்களுக்கும் பசித்தவர்களுக்கும் அவரது இல்லத்தின் கதவுகள் எந்நேரமும் திறந்தே வைக்கப்பட்டிருந்தன.

திஹாமாவிலிருந்து அவர் மக்கா வந்திருந்த சமயம் மக்கநகரக் குரைஷிகள் மாநபிபெருமான் (ஸல்) அவர்களை வேதனைக் கிடுக்கிகளால் நெருக்கிக் கொண்டிருந்தார்கள். புதிதாக நகருக்குள் நுழையும் எவரையும் குரைஷிகள் எப்பாடுபட்டேனும் அப்புதிய நபிக்கு எதிராக எதிரியாக்கிக் கொண்டிருந்தனர். சத்தியத்தையும் நம்பிக்கையையும் துணையாகக் கொண்டு நின்ற அச் சாந்திமார்க்கத் தூதர் தம் ஆக்கப்பணிகளுக்கு ஆண்டவனின் அருள் நாடி இறைஞ்சிக் கொண்டிருந்த போது, அவர்களின் எல்லா வழிகளிலும் குறுக்கே நின்று அக்குரைஷிகள் மக்கள் அந் நபியை நெருங்காவண்ணம் தடுத்து வந்தனர்.

துஃபைல் பின் அம்ரு தௌஸீ அந்தக் கொடுகளத்தில் பங்கேற்க வந்தவருமல்லர். மக்கத்துக் குரைஷிகளோடு

அவருக்கு அதற்கு முன் எந்தவித உறவுமிருந்ததுமில்லை. ஏதோ தம் சொந்த அலுவலாகவே மக்கா வந்த அவரை குரைஷிகள் வலியவே சென்று வரவேற்றனர். அவர் தங்குவதற்கென டாம்பீகமான ஏற்பாடுகளையும் செய்தனர். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைப் பற்றிய அவதூறுகளை அவர்முன் அள்ளிக் கொட்டினர்.

"எங்களின் இந்த நகரில் பிறந்த இம்மனிதர் தம்மை ஒரு நபி எனப்பிதற்றிக் கொண்டு புதிதாக ஒரு மார்க்கத்தைப் போதிக்கின்றார். எங்கள் முன்னோர்களின் மார்க்கத்தை நிந்தித்து எங்களுக்கு வேதனையை விளைவித்து விட்டார். எங்களுக்கிடையே பிளவையும் உண்டாக்கி விட்டார். தம்முடைய வார்த்தைகளில் மந்திர சக்தியை இணைத்து எங்களின் தந்தையர்களை விட்டும் தனயர்களையும், கணவர்களை விட்டும் பெண்களையும் உடன் பிறந்த ஒருவரை விட்டும் மற்றவரையும் பிரித்து எங்களின் வாழ்க்கையை பலஹீனப்படுத்தி விட்டார். நகரினுள் புதிதாக வந்திருக்கும் உம்மையும் அவர் மயக்கி வழி கெடுத்து, உமது சமூகத்திலும் பிளவையும் குழப்பத்தையும் உண்டு பண்ணி விடக்கூடும். எனவே நீர் அவரைச் சந்திக்கவோ அவரது சொற்களைச் செவியேற்கவோ வேண்டாம்" எனப் பலமாக எடுத்துரைத்தனர்.

ஊருக்குள் புதிதாக நுழைந்த தம்மை ஒரு பேராபத்திலிருந்து காத்திட முனைந்து நின்ற குரைஷிகளுக்குத் தம் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டனர் துஃபைல். அவர்களின் அறிவுரைகளை அப்படியே அங்கீகரித்துக் கொண்டதோடு மட்டுமல்ல, அவர்களிடமிருந்தே சிறிது பஞ்சையும் வாங்கி வைத்துக் கொண்டார். வீதிகளில் நடமாடும் போது அம் மந்திரக்காரரின் மாயச் சொற்கள் தம் செவிகளில் விழுந்திடாதவாறு இரு காதுகளிலும் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டே வெளிக்கிளம்புவார்

 

துஃபல். அறியாமைப் போர்வைக்குள் அப்போதிருந்த நிலையில்—சுவனப் பூஞ்சோலையின் சுகந்த மலர்களில் தம்மையும் ஒன்றாக இறைவன் படைத்திருக்கும் அந்தரங்கத்தை துஃபல் பின் அம்ரு தௌஸீ அறிந்திருக்கவில்லை.

குரைஷித் தலைவர்களின் போதனையால் பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களைப் பார்ப்பதையும் அவர்களின் மொழிகளைக் கேட்பதையும் வெகு எச்சரிக்கையோடு தவிர்த்துக் கொண்ட துஃபல் பின் அம்ரு ஆபத்து சூழ்ந்திருந்த அந்நகரை விட்டும் விரைந்து வெளியேறிடவே முடிவு செய்தார். தாம் நாடி வந்த அலுவல்களைத் துரிதமாகவே முடித்து ஊர் திரும்பச் சித்தமாகிவிட்ட, அவர், இறுதியாகக் கஅபாவை வலம் சுற்றி அதனுள்ளிருந்த பெரும் தெய்வங்களையும் வணங்கிப் புறப்பட நாடினார். ஆனால் மந்திரக்கார முஹம்மதின் பார்வையில் தாம் பட்டுவிடக் கூடாதே! அதற்காக அவர் அந்திக்கருக்கலிலேயே எழுந்துக் கொண்டார். ஊர் விழிக்கு முன் சென்று பூசைகளை முடித்துத் திரும்ப முடிவு செய்துப் புறப்பட்டார்.

புனிதத் திருவீட்டைச் சுற்றி, அதனுள் நுழைந்து தம் பூசைகளை முடித்து வெளிப்பட்ட துஃபல் பின் அம்ரு தௌஸீ மஸ்ஜிதுல் ஹராமுக்கு முன்பாக தாம் அதற்கு முன் அந்நகரினுள் சந்தித்தே இராத ஒரு புதிய மனிதர் நின்று வணங்கிக் கொண்டிருக்கக் கண்டார். அம்மனிதர் மட்டுமே புதியவரல்லர். அவர் வணங்கிக் கொண்டிருந்த முறையும் புதிதாக இருந்தது. தமது கூட்டத்தாரிடையே தாம் அதுவரை கண்டிராத—வழக்கத்திற்கு முற்றிலும் மாறான புதிய முறையில் அம்மனிதரின்—வணக்க முறை துஃபலின் சிந்தனையைக் கவர்ந்தது. அருகே சென்று அம்மனிதரைக் கவனிக்கலானார், குனிந்தும் சிரம் பணிந்தும் நிமிர்ந்தும் வணங்கிய அம்மனிதரின் உதடுகள் அசைவதையும் துஃபலின் கண்கள் கவனித்தன. அவர்

என்ன பேசுகிறார் என்பதைச் செவியுறவும் அவரின் உள்ளம் ஆவலுற்றது. அதே சமயம் தாம் அப்பராக்கில் சற்றே நேரத்தைக் கடத்தி விட்டாலும் குரைஷிகளால் எச்சரித்து அறிவூட்டப்பட்ட மந்திரக்காரர் அங்கு வந்திடக் கூடாதே என்ற அச்சமும் அவரை நெருக்கியது. கவனமாக சுற்றிலும் தம் பார்வையைச் செலுத்தினார் துஃபைல். வேறு எவரும் அங்கு காணப்பட வில்லை. இன்னும் அம்மந்திரக்காரர் விழிக்கவே இல்லை போலும் என தம்மனதை ஆறுதல் படுத்திக் கொண்டார். எதற்கும் முன்னெச்சரிக்கையாகத் தம் கரங்களில் பஞ்சை வைத்துக் கொண்டே தாம் கண்ட புதிய மனிதரை நெருங்கிக் கவனிக்கலானாரவர்.

மந்திரக்காரர் என்றும் மயக்கும் மொழியுடைய தந்திரக்காரர் என்றும் மக்காவின் குரைஷிகள் எவரைக் குறித்து அவரை எச்சரித்திருந்தார்களோ அப்பெருமான் முஹம்மதரின் (ஸல்) இனியகுரல் அல்லாஹ்வின் திருவசனங்களை ஏந்தி அவரின் செவிக்குள் நுழைந்து கொண்டிருந்தது. துஃபைல் பின் அம்ரு தௌஸீ தம் வசமிழந்து அவைகளைக் கேட்டவண்ணமே நின்றார்.

தொழுகையை முடித்து அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் எதையுமே கவனியாதவர்களாகத் தம் இல்லம் நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். மெய் மறந்து நின்ற துஃபைலின் கால்கள் தாமாகவே அவர் களைப் பின் தொடர்ந்தன. அவரது சிந்தனை மட்டும் விழித்துக் கொண்டது. சிறந்த கவிஞராக அப்போதே திகழ்ந்த துஃபைல் தீர்க்கமாகச் சிந்தித்தவண்ணமே நடந் தார். அவர் செவியேற்ற அவ்வசனங்கள் மனதை மயக்கும் மந்திரங்களைச் சார்ந்தவையல்ல, மதியைக் குழப் பும் தந்திரங்களுமல்ல. உண்மையில் அவை மனிதர்களின்

வசனங்களேயல்ல, மாபெரும் இறைவனின் வசனங்களே என்பதை அவரது அறிவு உணர்ந்தது.

நபிபெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் இல்லத்லத நெருங்கிய போதே தொடர்ந்து வந்த அப்புதிய மனிதரைக் கண்டார்கள். ஆம்! துஃபைல் பின் அம்ரு தௌஸீ முற்றிலும் ஒரு புதிய மனிதராகவே நின்றனர். "பெருமானே! இந்நகருக்கு புதிதாக வந்த என்னிடம் இந்நகரத்தார் தங்களைப் பற்றிய முரண்பட்ட தகவல்களைக் கூறியதன் பலனாகத் தங்களின் குரலையே கேட்கலாகாதென என் காதுகளில் பஞ்சை அடைத்துக் கொண்டிருந்தேன். எனினும் இறைவனின் நாட்டம் வேறாக இருந்தது. தாங்கள் இப்போது உண்மையை எனக்கு விளங்கச் செய்யுங்கள்" என வினயமாகக் கேட்டனர் துஃபைல். அண்ணலார் (ஸல்) அவர்கள் அகமகிழ்ந்தவர்களாக அவருக்கும் தம் போதங்களை எடுத்துரைத்தார்கள்.

"அவைகளைவிட மேலான சொற்களை என் செவிகள் எற்றதே இல்லை. அவர்களை விட மேலான மனிதரை என் கண்கள் கண்டதேயில்லை. அவர்களின் குண அழகிலேயே என் மனதைப் பறி கொடுத்தேன். முன் சென்று அவர்களின் கரங்களைப் பற்றி 'வணக்கத்திற்குரிய ஒருவனாக அல்லாஹ்வையும் அவன் தூதராகத் தங்களையும் ஏற்று சாட்சியம் கூறுகிறேன்' என்றவனாக என்னை இஸ்லாத்தில் இணைத்தேன்" எனக் கூறுகிறார்கள் ஹலரத் துஃபைல் பின் அம்ரு தௌஸீ (ரலி) அவர்கள்.

சில நாட்கள் மக்காவிலேயே தங்கியிருந்த ஹலரத் துஃபைல் (ரலி) அவர்கள் தங்களின் தௌஸ் கூட்டத்தாருக்கும் இஸ்லாத்தை எடுத்துரைப்பதற்காக நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்றுத் திரும்பினார்கள். வெகு நாட்களுக்குப் பின் இல்லம்

திரும்பிய அவர்களிடம் அவர்கள் ஏற்றுள்ள புதிய மார்க்கத்தைப் பற்றிய விபரங்களை அறிந்து அவர்களின் தந்தையும் மனைவியும் அம்மார்க்கத்தை ஏற்றனர். ஆனால் அவரது கூட்டத்தாருள் விரல் விட்டெண்ணத் தக்க ஒரு சிலரைத் தவிர்த்து பெரும்பாலார் அவரது சொற்களை ஏற்க மறுத்து விட்டனர். மனமுடைந்து மீண்டும் மக்கா வந்த ஹலரத் துஃபைல் (ரலி) அண்ணல வர்களைச் சந்தித்தனர். தம் கூட்டத்தவரின் புறக் கணிப்பைப் பற்றிக்கூறி அவர்களைச் சபிக்குமாறு கோரி னர். அண்ணலார் (ஸல்) அவர்களோ தெளஸ் கூட்டத் தாருக்கு நேர்வழியைக் காட்டியருளுமாறு இறைஞ்சி மீண்டும் அவர்களை திஹாமாவுக்குச் சென்று மக்களை மென்மையுடனும் இனிமையுடனும் பேசி இஸ்லாத்தின் பால் அழைக்குமாறு பணித்து அனுப்பி வைத்தார்கள். இம் முறை ஹலரத் துஃபைல் (ரலி) அவர்களின் அழைப்பை ஏற்று குடும்பம் குடும்பமாக 'தெளஸீ'கள் இஸ்லாத்தை ஏற்றனர்.

மக்காவில் அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு குரைஷி கள் விளைவிக்கும் தொல்லைகளைப் பற்றிய செய்திகள் துஃபைல் (ரலி) அவர்களைத் தொடர்ந்து எத்திய வண்ணமே இருந்தன. துஃபைல் (ரலி) அவர்கள் தாம் கோட்டை கொத்தளங்களுடன் பாதுகாப்பாக வாழும் யமன் நாட்டுக்கே வந்து விடும்படி அண்ணலவர்களை அழைத்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்கள் தாம் இறைவனின் கட்டளைக்காகக் காத்திருப்பதாகக் கூறி யமன் செல்ல மறுத்து விட்டார்கள். புனித நபிக்குப் புகலிடம் தரும் பெரும்பேறு யத்ரிபுக்காயிருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத்துச் செய்து மதீனாவில் குடியேறி ஏழாண்டுகளுக்குப் பின்னர் கைபர் படையெடுப்பின் போதே தமது கூட்டத்தாரில் எண்பது

குடும்பங்களோடு வந்து அண்ணலவர்களைச் சந்தித்தார்கள் ஹலரத் துஃபைல் (ரலி).

கைபர் போருக்குப் பின் மதீனாவிலேயே வாழ்ந்த அவர்கள் மக்கமா நகர வெற்றியிலும் பங்கேற்றார்கள். பின்னர் பெருமானார் (ஸல்) அவர்களின் அனுமதி பெற்று யமன் நாடு சென்ற அவர்கள் மீண்டும் நானூறு பேர்களோடு வந்து தாயிபின் படையெடுப்பில் கலந்து கொண்டார்கள். பின்னர் பெருமானார் (ஸல்) அவர்களோடு திரும்பி அவர்களின் மரணத் தருணம் வரையிலும் மதீனாவிலேயே வாழ்ந்த ஹலரத் துஃபைல் (ரலி) கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்கள் காலத்தில் நடைபெற்ற யமாமாப் போரில் உயிர் நீத்தார்கள்.

## இளமை

**அண்ணலார்** நாயகத் திருமேனி (ஸல்) அவர்களை முதல் முறையாகச் சந்தித்துத் திரும்பி, ஹலரத் துஃபைல் பின் அம்ரு (ரலி) இஸ்லாத்தை எடுத்துரைத்த ஆரம்ப காலத்திலேயே அவர்களின் கரம்பற்ற முந்திக்கொண்ட மிகச்சிலரில் மிகச் சிறப்படைந்தவர்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி). பிறந்த சமயம் தம் பெற்றோரால் அவர்கள் 'அப்துஷ் ஷம்ஸ்' எனப் பெயரிட்டழைக்கப்பட்டனர். தந்தை 'ஸக்ரை இளமையிலேயே இழந்து விட்ட அவர்கள் வறுமை வயப்பட்டு நின்றனர். புஸ்ரா பின்த் கஸ்வான் என்ற பெண்மணியிடம் வெறும் வயிற்றுணவு கூலியின் பேரில் பணியாளாக அமர்ந்து வாழ்க்கையைக் கழித்தனர். அப்பெண்ணும் அவளது வீட்டாரும் ஒட்டகைகளில் அமர்ந்து செல்கையில், அவ்வொட்டகைகளுக்கு உற்சாக மூட்டும்படியான பாட்டுகளைப்பாடிய வண்ணம் அவைகளை விரட்டிக்கொண்டு இவர்கள் கால் நடையாகவே ஓடிச்செல்வர்.

## மாநபியின் தோழமை

ஹலரத் துஃபைல் பின் அம்ரு(ரலி) அவர்களின் கரத்தில் ஆரம்பகாலத்திலேயே இஸ்லாத்தை ஏற்ற இவர்கள் ஹிஜ்ரி ஏழாம் ஆண்டில் தம் கூட்டத்தாரோடு சேர்ந்து வந்தே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைக் கைபரில் சந்தித்தார்கள். எனினும் அவ்விடைக் காலத்திலேயே பெருமான் நபி (ஸல்) அவர்களின் பெருங்குணச் சிறப்புகளைப்பற்றிய செய்திகளால் ஈர்க்கப்பட்ட இவர்கள் பயணவழி நெடுகையும் அப்பெருமானைப பற்றிய புகழ்ப்பாக்களை மனமகிழப் பாடிய வண்ணமே கடந்தார்கள்.

கைபரில் தம் கரம் பற்றிய அவர்களை அண்ணலார் (ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் எனப் பெயர் சூட்டி அழைத்தார்கள். அது முதல் அப்துர் ரஹ்மான் என்றும் அப்துல்லாஹ் என்றும் அவர்கள் அழைக்கப்பட்டு வந்தனர். எனினும் ஒரு நாள் அவர்கள் தம் மேலாடையினுள் ஒரு பூனைக்குட்டியைப் பாசத்துடன் மறைத்தணைத்த வண்ணம் வரக்கண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், அது என்னவென்று அவர்களிடம் கேட்டறிந்த பின் 'யா அபா ஹுரைரா! — ஏ பூனையின் தந்தையே!' என அழைத்ததிலிருந்து அதுவே அவர்களின் புகழ்ப்பெயராகி இயற்பெயர்களனைத்தையும் மறக்கச் செய்துவிட்டது.

## அன்னை

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் ஆரம்பத்திலேயே இஸ்லாத்தை ஏற்ற போதிலும் அவர்களின் அன்னை அதனை ஏற்க மறுத்து விட்டார். பெற்ற அன்னையிடம் பெரும் பாசமும் மரியாதையும் கொண்ட அவர்கள் தம் அன்னையை மதீனாவுக்கே அழைத்து வந்து

தம்மோடேயே இருக்கச் செய்து அவருக்கான எல்லாப் பணி விடைகளையும் நிறைவேற்றி வந்தனர். என்றாவது ஒரு நாள் தம் அன்னையாரும் இந்நேர்வழியின் பால் வந்து விடவேண்டும் என்ற ஆவலோடு, அவ்வம்மையாருக்கு இஸ்லாத்தைப் பற்றியும் இஸ்லாத்தின் திரு நபியைப் பற்றியும் அவ்வப்போது எடுத்துரைத்து வந்தார்கள். அவரோ அவைகளைத் தொடர்ந்து புறக்கணித்து வந்ததோடன்றி, ஒரு நாள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைச் சாடி வசைமாரியும் பொழிந்தார்.

அன்னையின் பாசம் ஒரு புறமும் அல்லாஹ்வின் தூதரின் கண்ணியம் மறுபுறமுமாகத் தம் உள்ளத்தை வருத்த அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் 'ஓ' வென்றழுத வண்ணம் அண்ணலார் (ஸல்) அவர்கள்முன் ஓடி வந்து நடந்தவையாவற்றையும் கூறி நின்றார்கள். தம் தாயின் உள்ளமும்திருந்த வழுத்தியருளுமாறு அண்ணலவர்கள் பால் இரந்து நின்றார்கள். பெருமானார் (ஸல்) அவர்களும் அவ்வம்மையாருக்கு நேர்வழியைக் காட்டியருளுமாறு இறைஞ்சினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களிடமிருந்து விடைபெற்று வீடு திரும்பிய ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களுக்குப் பெரும் மகிழ்ச்சி காத்திருந்தது அங்கே. அடைக்கப் பட்டிருந்த இல்லத்தின் கதவை அவர்கள் தட்டியபோது, சற்றுப் பொருத்திருக்குமாறு அவர்களின் தாயின் குரல் கேட்டது. அத்துடன் கேட்ட நீரின் ஒலி அவரது அன்னையார் குளித்துக் கொண்டிருப்பதை உணர்த்தியது. வெகு விரைவாகவே குளித்து முடித்து பின் அவ்வம்மையார் மேலாடைகளைப் போர்த்துக் கொண்டு வந்து கதவைத் திறந்தார். உள்ளே நுழைந்த ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் செவிகள் "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே என்றும் அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்கள்

அவன் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகின்றேன்" எனத் தம் தாயின் வாய் கூறக்கேட்டன.

மகிழ்ச்சியின் மிகுதியால் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் கண்கள் நீரை உகுத்தன. மீண்டும் ஓடோடிச் சென்று, "பெருமானே! தங்களின் வேண்டுதல் நிறைவேறி விட்டது. என் தாயார் இஸ்லாத்தை ஏற்று விட்டார்கள். இனி என்னைக் கொண்டும் என் தாயைக் கொண்டும் முஸ்லிம்களின் உள்ளங்கள் பொருத்தங் கொள்ள இறைஞ்சுங்கள்" என வேண்டினார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களும், 'இறைவா! நம்பிக்கை கொண்ட ஆண் பெண் அனைவரின் உள்ளங்களிலும் உன் அடியாரின் புகழ் மணக்கச் செய்தருள்' என இறைஞ்சினார்கள்.

## அருள் ஞானம்

அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்த நாள் முதல் இத்தோழர் தம் உலக வாழ்வின் எல்லாத் தேவைகளையும் ஒதுக்கி விட்டனர். அருகிலிருந்து அவர்களின் அறிவுரைகளைக் கேட்பதிலும் நடைமுறைகளைக் கூர்ந்து காண்பதிலுமே கருத்தாயிருந்தார்கள். திரு நபியின் அருள் முகத்தைக் காண்பதொன்றே அவர்களுக்கு அரும் பெரும் இன்பமாயிருந்தது. "அதற்கிணைகாட்ட ஓர் உவமானத்தை நான் பெறவே இல்லை. அப் பெருமகனாரின் திரு முகத்தில் பகலவன் பவனிவருவதையே நான் கண்டேன்" எனப் பின்னொரு சமயம் விளக்கிய அவர்கள், அப் பெருமானின் தோழமையைத் தாம் பெற்றதற்காகவே என்னாளும் இறைவனுக்கு நன்றி செலுத்திவந்தார்கள்.

மாநபியின் பள்ளியே அவர்களின் உறைவிடமாகி விட்டது. பகல் முழுவதும் பெருமானார் (ஸல்) அவர்களின் சமுகத்திலிருந்து பணிவிடை செய்வதும் அவர்களின் போதனைகளைக் கேட்பதும் இரவெல்லாம் விழித்திருந்து

பகலில் கேட்டவற்றை மனனம் செய்வதுமே அவர்களின் தொழிலாயிருந்தது. ''நான் என் இரவுகளை மூன்றாகப் பங்கிட்டிருந்தேன். ஒரு பகுதியில் இறைவணக்கம் புரிந்தேன். மறுபகுதியை உறக்கத்திற்காக ஒதுக்கினேன். மூன்றாம் பகுதியில் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் கேட்டவைகளை மனனம்செய்து வந்தேன்'' எனத் தாங்கள் அண்ணலரின் அருள் ஞானத்தைத் தம் நெஞ்சக் கருவூலத்தில் சேர்த்த பாங்கை ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களே கூறியிருக்கிறார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருகே நான்கே ஆண்டுகளே இருக்க அவர்கள் வாய்ப்பேற்றிருந்தும் மற்றதோழர்கள் அனைவரையும் விட அவர்களே அதிகமான அறவுரைகளை எடுத்தோதக் கண்டு நபிமணித் தோழர்களே வியப்படைந்தார்கள். 'மதீனாவின் அன்ஸார்கள் தங்கள் தோட்டந்துரவுகள், வேளாண்மைகளைக் கவனிக்கச் சென்று விடும்போதும், மக்காவிலிருந்து வந்து குடியேறிய முஹாஜிர்கள் தத்தம் தொழில் துறை கவலைகளில் மூழ்கியிருந்தபோதும், தாம் அத்தகைய உலகாயதத் தொடர்புகள் அனைத்தையும் துறந்து, அண்ணலார் (ஸல்) அவர்களின் அருகிலேயே இருந்து அவர்களின் அறவுரைகளைக் கற்று வந்ததாலேயே மற்றெல்லா நபி மணித் தோழர்களையும் விட தாம் அதிகமான ஹதீதுகளை அறிவிக்க முடிகிறது என ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களே விளக்கினார்கள்.

## நினைவாற்றல்

''எம்பிரான் (ஸல்) அவர்களின் அறவுரைகளை என்னைவிட அதிகமாகக் கூறக் கூடியவர் எவருமில்லை— அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களைத் தவிர, அவர் தாம் கேட்டவற்றை எழுதிவைப்பார் நான் எழுதி வைப்ப

தில்லை அவ்வளவே'' என ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் தம் நினைவாற்றலுக்கும் வெளிச்சம் தருகிறார்கள். அத்தகைய நினைவாற்றல் அவர்களுக்கமைந்ததெங்ஙனம்?

அறிவைத்தேடும் ஆர்வமும் ஹதீதுகளைக் கற்கும் அக்கறையுமேயன்றி மற்றெதிலும் இன்பம் காணாத அப் புதுமையான தோழரை நோக்கி ஒரு நாள் அண்ணலார் (ஸல்) அவர்கள், "அபா ஹுரைரா! போரில் கிடைக்கும் கனீமத்துப் பொருள்களில் உமது சகோதரர்கள் கேட்பதே போன்று ஒரு நாளும் நீர் எதுவும் கேட்பதில்லையே ஏன்!" என வினவினார்கள்.

"பெருமானே! இறைவன் தங்களுக்களித்துள்ள ஞானத்தில் ஒரு துளியேனும் தாங்கள் எனக்கருள் புரிவதையே அதைவிடப் பெருஞ் செல்வமாக நான் உவக்கின்றேன்'' என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள். "உமக்கு முன்னர் என்னிடம் எவரும் அதனைக் கேட்கவில்லை. அறிவைத் தேடுவதில் பேராவல் கொண்டவராகவே நீர் இருக்கின்றீர்'' என மகிழ்ந்த நபிபெருமான் (ஸல்) அவர்கள், "அபா ஹுரைரா! உமது மேலாடையை என் முன் விரிப்பீராக" எனப் பணித்தார்கள்.

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் தங்கள் மேலாடையை அண்ணலார் (ஸல்) அவர்களுக்கும் தங்களுக்குக்கும் இடையே விரித்தார்கள். சற்று நேரம் தங்கள் இரு கரங்களையும் ஏந்தி இறைவனிடம் யாசித்த ஏந்தலார் (ஸல்) அவர்கள், "அபா ஹுரைரா! அப்போர்வையை உம் நெஞ்சோடணைத்துக் கொள்வீராக'' எனப் பணித்தார்கள். அவ்வாறே அப்போர்வையைச் சுருட்டித் தம் நெஞ்சத்தோடு அணைத்துக் கொண்ட அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அந்த வினாடிமுதல் தாம் கற்ற கல்வி ஞானத்தில் ஒரேயொரு எழுத்தையும் கூட தம் வாழ்நாளில்

என்றும் மறந்ததில்லை—என அவர்களே அறிவித்திருக்கிறார்கள்.

“அப்போர்வையைத் தம் நெஞ்சோடணைத்த அபூ ஹுரைரா (ரலி) “என் இறைவா மறதியால் அழிந்துபடாத கல்வியை எனக்கருள் புரி என இறைஞ்சினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்கள் ‘ஆமீன், அப்படியே ஆகுக’ என்றார்கள். அது முதல் அபூ ஹுரைரா (ரலி) தாம் கேட்ட எதையும் மறந்தனரேயில்லை” என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஒரு முறை நானும் அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் மற்றொரு தோழரும் பள்ளியில் அமர்ந்து இறைவனை வழுத்திக் கொண்டிருந்தோம். அண்ணலார் (ஸல்) அவர்கள், வந்தார்கள். எங்கள் அருகே அமரிந்தார்கள். நாங்கள் மவுனித்திருந்தோம். “உங்கள் செயல்களைத் தொடருங்கள்” என்றார்கள். நானும் என் தோழரும் இறைஞ்சலானோம். அண்ணலார் எங்கள் இறைஞ்சுதல்களுக்கெல்லாம் ‘ஆமீன் - அப்படியே ஆதக’ எனக் கூறிக் கொண்டிருந்தார்கள். எங்கள் இருவரையும் அடுத்து அபூ ஹுரைரா (ரலி) இறைஞ்சத் துவங்கினார். அவர் தம் இறைஞ்சுதலில் ‘இறைவா! என் தோழர்கள் இருவரும் யாசித்ததையெல்லாம் நீ எனக்கும் அருள்புரி. அவைகளோடு’ ‘என்றும் மறந்து படாமல் நினைவில் நிலைத்து நிற்கக்கூடிய கல்வியையும் அருள்புரி’ என இறைஞ்சினார். அண்ணலாா (ஸல்) அவர்களும் ‘ஆமீன்’ என்றார்கள் நாங்களும் இருவரும், பெருமானே அத்தகைய மறக்கப்படாத கல்வியை நாங்களும் யாசிக்கிக்றோம் என்றோம். “அந்த தௌஸீ இளைஞர் உங்களை முந்திக் கொண்டார்” என, அண்ணலார் (ஸல்) கூறிவிட்டார்கள் — என்று ஹலரத் ஜைத் இப்னு ஸாபித் (ரலி) அறிவிக்கிறனர்.

மிகப் பிற்காலத்திலும் கூட அவர்களின் நினை வாற்றலை சோதிக்க எண்ணிய மர்வான் இப்னு ஹக்கம் என்ற மதீனாவின் ஆளுநர் ஒருமுறை அவர்களை அழைத்து வரச் செய்து ஒரு நூறு ஹதீதுகளைக் கூறச் செய்தார். அவர்கள் கூறியதை அப்படியே தம்முடைய எழுத்தரைக் கொண்டு பதியவும் கட்டளையிட்டார். சரியாக ஓராண்டு கழிந்த பின் மீண்டும் அவர்களை அழைத்து முன் அவர்கள் கூறிய ஹதீதுகளையே ஒப்புவிக்கக் கட்டளையிட்டார். ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் ஹதீதுகளை முன்போலவே கூறத் துவங்கினர். முந்தின ஆண்டு பதியப் பட்டவைகளோடு ஒப்பிட்டுக் கவனிக்கப்படுகையில் ஒரேயொரு எழுத்துங்கூட பிசகாமல் இருக்கக் கண்டு மர்வான் வியந்தார்.

## பசி தீர்த்த பெருமான்

பொறுமையையே தங்களுக்குப் போர்வையாக்கி பசியிலே ருசி கண்டு வாழ்ந்தவர்கள் 'அஸ்ஹாபுஸ் ஸுஃப்ஃபாக்கள்' எனப்பட்ட திண்ணையின் தோழர்கள். ஒட்டிய வயிறுகளுக்கும் ஒட்டுப்போட்ட கந்தல்களுக்கும் உரிமைக்காரர்களான ஏறத்தாழ எழுபது பேர்கள்—மஸ்ஜிதுன்னபவீயின் ஒரு மூலையில் அமைக்கப்பட்டிருந்த திண்ணையே அவர்களின் நிரந்தரக் குடியிருப்பு. அதனை விட்டும் அவர்கள் இறங்கினார்களானால் அவர்களின் பசியின் துடிப்புக்கு அடையாளம் அது. அந்த ஒட்டாண்டிகளின் சட்டாம் பிள்ளை ஹலரத் அபூ ஹுரைரா (ரலி). தொடர்ந்த பல இரவுகளையும் பகல்களையும் காய்ந்த ரொட்டித் துண்டுகளுக்கும் கதியற்று அவர்கள் கழித்த நாட்கள் பல. அத்தருணங்களில் பெருமான் நபி (ஸல்) அவர்களின் கரங்களால் தங்கள் பசி தீர்ந்த புதுமைகளை ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) விளக்குகிறார்கள்.

"ஒரு நாள் நான் பள்ளியினுள் நுழைந்தேன். பசியின் கொடூரம் தாங்க முடியாதிருந்தது. நான் சந்தித்த இரண்டொரு தோழர்களும் பசி பொறுக்காது அல்லல் பட்டுக் கிடந்தனர். நாங்கள் அனைவருமாக அண்ணலவர் களைச்சென்று கண்டோம். எம்பெருமான் (ஸல்) அவர்கள் 'அபா ஹுரைரா! எங்கே அகால நேரத்தில்' என வின வினார்கள். 'பெருமானே! பசியின் கொடுமை தாளமுடிய வில்லை' என்றேன். எம்பிரான் (ஸல்) அவர்கள் வீட்டினுள் சென்று ஒரு தாம்பாளத்தை ஏந்தி வந்தார்கள். அதில், பேரீத்தங்கனிகள் இருந்தன. 'ஆளுக்கிரண்டாய் தின்று விட்டு தண்ணீர் அருந்துங்கள்' என நவின்றார்கள் நாயகம் (ஸல்). நான் ஒன்றை தின்று ஒன்றை பத்திரப் படுத்தினேன். 'அது எதற்காக' என அண்ணலார் (ஸல்) வினவினார்கள். 'என் அன்னைக்காக' என்றேன். 'வேண்டாம் அதனை நீரே உண்பீராக' எனப் பணித்த ஏந்தலார் (ஸல்) அவர்கள் என் அன்னைக்காவும் தனியாக இரண்டு கனிகள் தந்தார்கள்" என அறிவிக்கின்றார்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

ஒரு சமயம் மூன்று நாட்களாகப் பசித்திருந்த ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள், பசியின் கொடுமையால் நடக்கவும் சக்தியிழந்து விழுந்து விழுந்து எழுந்து திண்ணையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு வழியாகத் திண்ணையைச் சென்றடைந்த பொழுது அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் இரண்டு பாத்திரங்களில் தங்களுக்கு அன்பளிப்பாக வந்த கோதுமை கலந்து காய்ச்சப்பட்ட உணவை திண்ணைத் தோழர் களுக்கு உண்ணப் பங்கிட்டளித்துக் கொண்டிருந்தார்கள். ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வந்து சேர்ந்த போது எல்லோருக்கும் அவ்வுணவு பங்கிடப் பட்டு முடிந்து விட்டிருந்தது. வெறுமையான இரண்டு

பாத்திரங்களின் ஓரங்களிலும் ஒட்டிக் கொண்டிருந்ததைத் தவிர்த்து வேறொன்றும் இருக்கவில்லை. ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வந்ததைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் பாத்திரங்களின் ஓரங்களில் ஒட்டிக் கொண்டிருந்த உணவை வழித்து ஒன்று சேர்த்தார்கள். அது ஒரு கவள உருண்டையாயிற்று. அதனைத் தம் புனிதத் திருக்கரத்தால் அவர்களிடம் தந்து நபி பெருமான் (ஸல்) அவர்கள், "அபா ஹுரைரா, இறைவனின் திருப் பெயர் கூறி இதனை நீர் உண்ணுவீராக" என்றார்கள் "எவனுடைய திருக்கரத்தில் என் ஆன்மா இருக்கிறதோ அந்த இறைவன் மீதாணையாகக் கூறுகிறேன். என் பசி தீரும் வரை அதனை நான் உண்டேன். அது பெருகிக் கொண்டிருந்தது" என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

"ஒரு முறை பசியின் கொடுமையால் நடக்கவும் முடியாமல் ஆகிவிட்ட நான் நபி மணித் தோழர்கள் நடந்து செல்லும் பாதையில் அமர்ந்து கொண்டேன். ஹலரத் அபூ பக்கர் (ரலி) அவர்கள் அவ்வழியாக வந்தார்கள். நான் திருக்குர்ஆனில் ஒரு வசனத்தை அவர்களிடம் ஓதிக் காட்டி விளக்கம் கேட்டேன். உண்மையில் அதனைக் கேட்டு விளங்கிக் கொள்ளும் தேவையுற்றல்ல. பசியுற்றிருக் கிறோம் என்பதை உணர்த்த நாங்கள் காட்டிக் கொள் ளும் சைக்கினை அது. அபூ பக்கர் (ரலி) அவர்கள் என்னைத் தம் இல்லம் அழைத்துச் சென்று ஏதேனும் உண்ணச் செய்வார்கள் என எதிர்பார்த்தே நான் அவ் விதம் கேட்டேன். ஆனால் அவர்கள் நான் கேட்ட விளக் கத்தைக் கூறி விட்டுக் கடந்து சென்றார்களேயன்றி என்னைத் தங்களோடு அழைத்துச் செல்லவில்லை. அவர்

களும் என்னைப் போலவே பட்டினி கிடக்கிறார்கள் என் பதை அதன் மூலம் நான் புரிந்து கொண்டேன்.

ஸஹாபாக்கள் ஒருவருக்கொருவர் இப்படித்தான் தங்கள் நிலைமைகளை விளக்கிக் கொள்வதைத் தவிர்த்து இரப்பதும் இல்லை, இல்லை என்றுரைப்பதுமில்லை.

அடுத்தாற்போல் உமர் (ரலி) அவர்கள் அவ்வழியாக வந்தார்கள். அவர்களிடமும் அவ்வாறே ஒரு திருக்குர்ஆன் வசனத்தை ஓதிக்காட்டி விளக்கம் கேட்டேன். அவர்களும் கேட்ட விளக்கத்தைக் கூறிவிட்டுக் கடந்து சென்றார்களே யன்றி என்னை உடனழைத்துச் செல்லவில்லை. அவர் களின் வீடும் பட்டினிப் பாசறை எனப் புரிந்து கொண்டேன்.

கருணைக் கடலான பெருமான் நபி (ஸல்) அவர்கள் அடுத்து வந்தார்கள். என்னைப் பார்த்து முறுவலித் தார்கள். என் முகத்தின் வாட்டத்திலிருந்தே அகத்தின் தேட்டத்தைத் தெரிந்து கொண்டார்கள்.

''அபாஹுரைரா!'' என அழைத்தார்கள்.

''பெருமானே! ஆணையிடுங்கள்'' என்றேன்.

''எழுந்து என்னோடு வாரும்'' என்றழைத்தார்கள். நான் அவர்கள் பின்னே நடந்தேன். என்னையும் அழைத்துக் கொண்டு தங்களின் இல்லத்தினுள் நுழைந்த நபிபெருமான் (ஸல்) அவர்கள் அங்கு ஒரு குவளையில் வைக்கப்பட்டிருந்த பாலைக் கண்டு அது எங்கிருந்து வந்தது என வினவினார்கள். 'இன்னாரிடமிருந்து தங்க ளுக்கு அன்பளிப்பாக வந்தது எனக் கூறினர் வீட்டார்.

உடனே என் புறம் திரும்பிய பெருமானார் (ஸல்) அவர்கள், "அபாஹுரைரா! நீர் சென்று திண்ணைத் தோழர்கள் யாவரையும் அழைத்து வாரும்" எனப் பணித்தார்கள். எனக்குப் பகீரென்றது.

திண்ணைத் தோழர்கள் இறைவனின் விருந்தாளிகள். அவர்களுக்கென ஒரு குடிலுமில்லை; குடும்பமுமில்லை; கூடி மகிழ எந்த உறவுமில்லை. மெல்லிய ஆடைகளுக்கோ காய்ந்த ரொட்டித் துண்டுகளுக்கோ கூட கதியற்றிருந்த அவர்களை அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களோ ஒரு போதும் மறப்பதில்லை. தர்மமாகத் தங்களிடம் வரும் உணவுகளை அப்படியே அத்தோழர்களுக்குத் தந்து உண்ணச் செய்வார்கள். அதில் ஓர் அணுவளவும் தாங்கள் உண்ணமாட்டார்கள். அன்பளிப்பாக ஏதேனும் வரும் போது மட்டும் தாங்களும் அவர்களோடு பகிர்ந்து உண் பார்கள். இது அண்ணலார் (ஸல்) அவர்களின் நிலையான வழக்கமேயாகும். ஆனால்!

இந்தக் குவளையில் உள்ள பால் எங்கே! திண்ணைத் தோழர்களின் கூட்டம் எங்கே!! என்னைப் பீடித்து வதைக் கும் கோரப்பசி எங்கே!!! பசியின் கொடுமையோடு அருகில் நின்ற நானே அதற்கு முதலுரிமைக்காரன். திண்ணைத் தோழர்கள் அனைவரும் வந்தால் அவர்களுக்குப் பாலைப் பங்கிட்டு வழங்க நபி பெருமான் (ஸல்) என்னையே பணிப் பார்கள். பங்கிடுபவன் எல்லோருக்கும் பங்கிட்டு இறுதியில் தானே தான் அருந்த வேண்டும்? இங்கிருக்கும் பாலை எல்லோருக்கும் பங்கிட்ட பின் என் பசிக்கு என்ன மிஞ்சப் போகிறது—என்ற எண்ணங்கள் என்னை அலைக் கழித் தன. என்றாலும் அல்லாஹ்வுடைய ரஸூல் கட்டளை யிட்டு விட்டார்கள். நான் எங்ஙனம் தாமதிக்க முடியும்? விரைந்து சென்று அவர்களனைவரையும் அழைத்து வந்தேன்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள் குவளையை என்னிடம் தந்து அதிலிருந்த பாலை ஒவ்வொருவருக்கும் அருந்தக் கொடுக்கும் படி பணித்தார்கள். அவ்வாறே நான் ஒவ்வொரு வருக்கும் கொடுத்துக் கொண்டே வந்தேன். இறைவனின் அற்புதம்! குவளையில் பால் இருந்து கொண்டே இருந்தது. எல்லோரும் அருந்தி முடித்ததும் குவளையைத் தம் கரத்தில் பெற்றுக் கொண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் என்னை நோக்கிப் புன்முறுவல் பூத்தார்கள். "அபாஹுரைரா! இப் போது நாம் இருவர் மட்டுமே எஞ்சியிருக்கிறோம் என்றார் கள். "நாயகமே! ஆம்" என்றேன். "இதோ நீரும் அருந்தும்" எனக் கூறி குவளையை என்னிடம் கொடுத்தார் கள். நான் அருந்தினேன். "இன்னும் அருந்தும்" என் றார்கள். அருந்தினேன். மீண்டும் கூறினார்கள் வயிறார அருந்தினேன். இறுதியாக, "பெருமானே! இனி என் வயிற்றில் இடமில்லை" என்று கூறினேன். "அப்படி யானால் இனி எனக்குத் தாரும்" எனக் கேட்டுக் குவளை யைப் பெற்ற என் ஏந்தலார் நாங்கள் யாவரும் அருந்தி மீதம் இருந்ததை இறைவனின் திருப்பெயர் கூறி தாங்கள் அருந்தினார்கள்.

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களோடு கழித்த ஆரம்ப நாட் களின் நினைவு அலைகள் இவை.

ஒரே துணியுடன் வறுமையிலேயே பெருமை கண்டு அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் சொல்லோடும் செயலோடும் ஒன்றித்து வாழ்ந்த அப்பெருந்தகையுன் பொறுமை கண்டு கருணை கொண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு நாள் ஒரு பொட்டலத்தை அவர்களிடம் தந்து 'அபாஹுரைரா! இதனை உமது பையில் வைத்துக்கொள் ளும். உமது உள்ளம் நாடும் போதெல்லாம் இதிலிருந்து

எடுத்து நீரும் புசிப்பீராக. பசித்தவருக்கும் தருவீராக. பற்றாதாகி விடுமோ என அஞ்சி கஞ்சத்தனம் செய்யவேண்டாம். எனது எச்சரிக்கையை நினைவில் வைத்துக் கொள்ளும். ஒரு நாளும் பையைக் கவிழ்க்க வேண்டாம். அது ஒரு போதும் வெறுமையாகாது" என்று கூறினார்கள். அத்துடன் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் பசியே அகன்றது. ஏறத்தாழ முப்பதாண்டு காலம் வரையிலும் அது அவர்களிடம் இருந்தது. அவர்கள் நினைத்தபோதெல்லாம் அதிலிருந்து புசித்தார்கள். பசித்தவர்களுக்கெல்லாம் அதிலிருந்து அள்ளித் தந்தார்கள். ஆனால் அது தீரவே இல்லை. மூன்றாம் கலீஃபா ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் கொல்லப்பட்ட அன்று மதீனாவில் நடந்த அமளியில் அவர்களின் இடுப்பிலிருந்து அறுந்து விழுந்த அப்பை ஒருவர் கரத்திலும் கிடைக்காமல் அத்துடன் மாயமாகவே மறைந்து விட்டது. ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் தங்களின் வாழ்நாள் முழுவதும் அதற்காக கவலையுற்றவர்களாகவே இருந்தார்கள்.

"மனிதர்கள் அனைவரும் இன்றைய தினம் ஒரே நட்டத்தை அடைந்தனர். நானோ இன்று இரண்டு வித நட்டங்களை அடைந்தேன். கலீஃபா உதுமான் (ரலி) அவர்களை இழந்ததோர் புறமிருக்க, அண்ணலார் (ஸல்) அவர்கள் எனக்கருளிய உணவுக் கருவூலத்தையுமல்லவா இழந்து விட்டேன்" என அவர்கள் பாடிக் கொண்டு சென்றதை மக்கள் செவியுற்றனர்.

## கலீஃபாக்களின் காலம்

அண்ணலார் (ஸல்) அவர்களையடுத்துப் பொறுப்பேற்ற கலீஃபாக்களின் ஆட்சி அரபு மாநிலம் முழுதும் பரந்து விரிந்தது. அக்காலத்தில் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கலீஃபா உமர் (ரலி) அவர்களால் பஹ்ரை

னின் ஆளுநராக அனுப்பப்பட்டார்கள். எனினும் மிகச் சில நாட்களே அப்பொறுப்பில் அமர்ந்து மதீனா திரும்பி விட்ட அவர்களை கலீஃபா அவர்கள் மீண்டும் அப் பொறுப்பை ஏற்கப் பணித்தபோது அதிகாரத்தையும் தலைமைத் தனத்தையும் தாம் விரும்பவில்லை எனக் கூறி ஏற்க மறுத்து விட்டார்கள்.

கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் காலத்திலும் அரசியலை விட்டுப் பூரணமாக அவர்கள் ஒதுங்கியே இருந்தார்களானாலும் கலகக்காரர்கள் கலீஃபா அவர் களின் இல்லத்தைச் சூழ்ந்து கொண்ட சமயம் நாயகத்தின் அக்கலீஃபாவுக்குதவ விரைந்து வந்தார்கள்.

"என்னுடைய கூட்டத்தார்களே! எனக்கென்ன (ஆச்சரியமாயிருக்கிறது!) நானோ உங்களை ஈடேற்றத் தின்பால் அழைக்கிறேன். நீங்களோ என்னை நரகத் தின்பால் அழைக்கிறீர்கள்" என்ற (40 : 41) வேத வசனத்தை ஓதிய வண்ணம் கலகக்காரர்களைக் கடந்த ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள், கலீஃபா அவர் களைச் சூழ்ந்திருந்த நபிமணித் தோழர்களுக்கும் அவர்களை தொடர்ந்தவர்களுக்கும் அண்ணலரின் முன்னறிவிப்பை நினைவூட்டி உரையாற்றினார்கள்.

"அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தங்களுக்குப் பின் தோன்றப்போகும் குழப்பங்களைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தார்கள். ஒருவர், 'பெருமானே! அச்சமயம் எங்களுக்குத் தாங்களிடும் கட்டளை என்ன? என்று கேட் டார். அண்ணலார் (ஸல்) அவர்கள், 'நீங்கள் உங்கள் தலைவருக்கும் அவரின் தோழர்களுக்கும் உதவுங்கள்' என உதுமான் (ரலி) அவர்களைச் சுட்டிக்காட்டிக்கூறினார்கள்." என்று பிறருக்குரைத்த ஹலரத் அபூ ஹுரைரா (ரலி)

அவர்கள் தாங்களும் வாளேந்தினார்களாயினும் கலீஃபா அவர்கள் தம் பொருட்டு எவருடைய இரத்தமும் சிந்தப் படக் கூடாதென அவர்கள் யாவரையும் தடுத்து விட்டார்கள்.

அலீ (ரலி) அவர்களின் கிலாஃபத்தில் முஆவியா (ரலி) அவர்களோடு ஏற்பட்ட உட்பூசலில் எவர் புறமும் சாராது தங்களைப் பேணிக் கொள்ளும் எண்ணத்தோடு நகரத்தை விட்டும் வெளியேறி மறைந்து வாழ்ந்த பல நபி மணித் தோழர்களில் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் ஒருவர். 'ஜமல்—ஸிப்ஃபீன்' போர்கள் எதிலும் அவர்கள் பங்கேற்கவில்லை. கலீஃபா அலீ (ரலி) அவர்கள் கூஃபா வைத் தலை நகராக மாற்றிக் கொண்டபின் போர் நடவடிக்கைகளை விட்டும் விடுபட்டிருந்த மதீனாவின் பள்ளியில் அவர்கள் தொழுகை நடத்திய சம்பவங்கள் மட்டுமே காணக் கிடைக்கின்றன.

## குண நலன்கள்

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்துக் குப்பின் நாற்புறமும் விரவிச் சென்ற அவர்களின் நற்றவத் தோழர்கள் வெற்றி முழக்கி, வாகைகளை ஈட்டி, வளவாழ் வை விலைபேசிக் கொணர்ந்து மதீனாத் திருநகரை பசுமை பூத்துக்குலுங்கும் சோலையாக மாற்றிய பொழுது, ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் நிலையிலும் மாறுதல் ஏற்பட்டது. வறுமை அவர்களை விட்டுப் பறந்தோடியது. இஸ்லாம் அவர்களுக்குத் தந்த பெருமையும் சிறப்பும் அவர்களின் எஜமாட்டியையே அவர்களைத் தம் கணவராய் ஏற்றுக் கொள்ளச் செய்தது. ஆம்! அபூ ஹுரைரா (ரலி) புஸ்ரா பின்த்து கஸ்வான் அம்மையாரை மணமுடித்து

மக்கட்பேறும் பெற்று வாழ்ந்து வந்தார்கள். மாநபித் தோழர் ஹலரத் உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்களின் உடன் பிறந்தாரே இவ்வம்மை. இத்திருமணத்தால் ஹலரத் அபூஹுரைரா (ரலி) மிகப் பெருமிதங் கொள் பவர்களாயிருந்தார்கள்.

"அவர்களின் இல்லத்தில் ஏழு நாட்கள் வரை விருந் தினனாகத் தங்கியிருந்தேன். ஒவ்வோர் இரவையும் அவர் களும் அவர்களின் மனைவியும் மகளும் முறைவைத்து இறைவணக்கம் புரியக்கண்டேன்" என அபூ உதுமான் நஹ்தீ என்ற பெரியார் அந்நபிமணித் தோழரின் குடில் இரவும் பகலும் ஜீவனுடையதாய் விளங்கிடத் தாம் கண்டதை வெளிப்படுத்துகிறார்.

இல்லறத்தை நல்லறமாய்ச் செம்மைப் படுத்திய நிலை யிலும் இம்மையின் டாம்பீகத்தை விட்டும் அவர்கள் பூண்டிருந்த துறவறம் துறக்கப்படவில்லை. பஹ்ரைனின் ஆளுநராக அவர்கள் பதவி வகித்த காலத்திலும் தங்கள் பூர்வோத்திரத்தை ஒருபோதும் அவர்கள் மறந்தனரில்லை. பெருவாழ்வு பெற்று விளங்கிய காலத்திலும் பெருமையை அருகவிடாது விலக்கி, உணவிலும் உடையிலும் வாழ்க் கையின் நடைமுறையிலும் எளிமையையே மேற்கொண் டார்கள். பெருமான் நபி (ஸல்) அவர்களின் திருவாழ்வு அவர்களின் நினைவை விட்டும் ஒருபோதும் அகன்ற தில்லை. ஒரு நாள் அவர்களுக்களிக்கப்பட்ட விருந்தில் வறுத்த இறைச்சியுடன் கூடிய உயர்ந்த உணவுகள் பரி மாறப்பட்டன. "என் ஏந்தலார் தம் வாழ்நாளில் சோள ரொட்டியையும் கூட வயிறார உண்டதில்லையே" எனக் கூறி அவர்கள் அதனை ஏற்க மறுத்து விட்டார்கள்.

அவர்களின் மகளார் தமக்குப் பொன்னாபரணங்கள் இல்லாததால் தம் தோழிகள் ஏளனம் பேசுகிறார்கள்

எனக் குறைபட்டுக் கொண்டபோது, "மகளே! உன் தந்தை கஞ்சனல்லன்; இறுகிய நெஞ்சம் கொண்ட வனுமல்லன்; ஆனால் எரி நரகின் வேதனைக்கு அஞ்சுபவன் என உன் தோழிகளுக்கு உணர்த்துவாயாக" எனக் கூறி விட்டார்கள்.

ஒரு சமயம் மெல்லிய இரு மேலாடைகளை அணிந் திருந்த அவர்கள், அவற்றில் ஒன்றினால் தங்கள் முகத்தைத் துடைத்துக் கொண்டே "இன்றைய தினம் மெல்லிய இத்தகைய ஆடைகளை அணிந்துள்ளேன். ஆனால் ஒரு நேரத்தில் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்துக்கும் நபி பெருமான் (ஸல்) அவர்களின் மேடைக்கும் இடையே பசி தாளாது நான் விழுந்து கிடந்த போது மக்கள் எனக்குப் பயித்தியம் பிடித்து விட்டதாக எண்ணி என் பிடரியை மிதித்துக் கொண்டு சென்றதும் எனக்கு நினைவு வருகிறது" என்றார்கள்.

"அநாதையாக நான் பிறந்தேன். ஏழையாக நாடு கடந்து வந்தேன். வெறும் வயிற்றுணவுக்காக ஒரு பெண் ணிடத்தில் நான் ஊழியத்தில் அமர்ந்தேன். ஏறிச்செல்ல ஒரு வாகனமும் எனக்கிருந்ததில்லை. என் எச மானியின் குடும்பத்தார் ஒட்டகைகளின் மீது ஏறிச் செல்வர். ஆனால் நான் நடந்தே செல்வது மட்டுமல்ல, பாட்டுகளைப் பாடி அவ்வொட்டகைகளை உற்சாகப் படுத்தி விரட்டிச் செல்ல வேண்டியவனாக இருந்தேன். இன்றைய தினம் அந்த எசமானி என் மனைவியாகி விட்டாள். எனக்கு ஏறிச் செல்ல வாகனமும் இருக்கிறது. வாகனத்தில் நான் வந்திறங்கும்போது எனக்கு மரியாதை யும் செலுத்தப்படுகிறது. என் இறைவன் எனக்குப் புரிந்துள்ள அருள் இது. அவனே இந்த மார்க்கத்தை உங்களுக்கு நிலையாக்கினான், அபூஹுரைராவை இமா

மாக்கினான்'' எனத் தம் இறைவனின் பேரருளை நினைவு கூர்ந்தார்கள்.

வளவாழ்வைத் தந்த இறைவனையும் உளமார அணைத்த அவன் தூதரையும் அவர்கள் அளவற்று நன்றி கூர்ந்தார்கள்.

''அபூஹுரைராவுக்கு இஸ்லாத்தை காட்டிய அல்லாஹ்வே புகழுக்குரியவன்''

''அபூஹுரைராவுக்குக் குர்ஆனைக் கற்பித்த அவனே நன்றிக்குரியவன்.''

''அண்ணலரின் தோழமையை அபூஹுரைராவுக்கு அருளிய அவனே மிக சங்கைக்குரியவன்'' என்ற சொற்றொடர்களை அவர்கள் திருவாய் சொரிந்த வண்ணமே இருந்தது.

மர்வானின் சார்பாக மதீனாவின் ஆளுநராகப் பொறுப்பேற்றிருந்த பிந்திய காலங்களிலும் இப்புனித நபித் தோழர் தங்கள் வீட்டுக்கென விறகுச் சுமையைத் தெருவில் தாங்களே சுமந்து செல்வர். நெரிசலான இடங்கள் எதிர்ப்படும் போதெல்லாம் ''உங்களின் ஊழியனுக்கு வழி விடுங்கள்'' என்றே கேட்பார்கள்.

அவர்களின் ஈகைக் குணமும் தாராள மனமும் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்த அன்றே வெளிப்பட்டது. யமனிலிருந்து மதீனா வந்தடைந்த அவர்களின் கூட்டம் மாநபி (ஸல்) அவர்கள் கைபருக்குச் சென்றிருந்ததறிந்து கைபருக்கே புறப்பட்டது. பயணவழியில் அவர்களின் ஓர் அடிமை பாதை தவறிச் சென்று விட்டார். கைபரை அடைந்து அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களின் கரம் பற்றி உரையாடிக் கொண்டிருந்த சமயம் அவ்வடிமையும் அங்கு வந்து சேர்ந்தார். 'அப்துர் ரஹ்மான்! இதோ உம் அடிமையும் உமக்குக் கிடைத்து விட்டார், மகிழ்வீராக' என்

அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். பெருமான் நபி (ஸல்) அவர்களின் கரம்பற்றிய பெருமிதங்கொண்டிருந்த அபூஹுரைரா (ரலி) அக்கணமே அவ்வடிமையை அல்லாஹ்வுக்கென விடுதலை செய்து விட்டார்கள்.

வறுமை அவர்களை வறுத்தெடுத்த காலத்திலும் அவர்கள் கருமித்தனங் கொண்டதில்லை. கடும் பசியினிடையேயும் கனிவே இழையோடும் மொழிப் பழக்கம் இயல்பாகவே அவர்களுக்கிருந்தது. வளவாழ்வு கொண்ட காலத்திலோ ஆண்டவன் தமக்களித்த அருட்கொடைகளை இல்லாதார்க்கும் இயலாதார்க்கும் அள்ளி வழங்கினார்கள். வாழ்க்கையின் மிகப் பிந்திய காலத்திலும் அவர்களின் வள்ளன்மையைப் பற்றிச செவியுற்ற மதீனாவின் ஆளுநர் மர்வான் வியப்புற்று அதனைச் சோதிக்க எண்ணினார். ஒரு நாள் ஒரு நூறு பொற்காசுகளைத் தம் ஊழியர் ஒருவரிடம் தந்து ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் சேர்ப்பிக்கச் செய்தார். மறு நாள் அவ்வூழியரையே அனுப்பிவைத்து, வேறொருவருக்குச் சேர்ப்பிக்க வேண்டிய அத்தொகையைத் தவறுதலாகத் தாம் அவர்களிடம் சேர்ப்பித்து விட்டதாகக் கூறி அதனைத் திரும்பத்தரக் கேட்டுப் பெறுமாறும் பணித்தார். அவ்வூழியரும் அவ்வாறே சென்று கேட்க, அளவு கடந்த நாணமடைந்த ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள், அவ்வூழியரிடம் "நான் அவற்றை நேற்றே தர்மம் செய்து விட்டேனே. இன்று என்னிடம் ஒருகாசும் கூட இல்லையே. அன்பு கூர்ந்து பொறுத்திருந்து இம் மாதம் பொதுப் பணத்திருந்து ஏதேனும் எனக்குப் பங்காகக் கிடைக்குமாயின் அதில் அத்தொகையைக் கழித்துக் கொள்ளுங்கள்" என வேண்டி நின்றனர்.

மணவாழ்வு கொண்ட பின்னர் அவர்கள் தம் மனைவியின் துணைக்காக ஒரு பணிப் பெண்ணை அமர்த்தியிருந்

தார்கள். ஒரு நாள் அப்பணிப்பெண் செய்த தவற்றினால் அவர்களின் மனைவியார் கடுஞ்சினமடைந்திருந்தார். இல்லம் மீண்ட ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் அத்தவறு பற்றி விவரிக்கப்பட்டபோது அவர்களையும் கடுஞ்சினமடையச் செய்தது அவளின் குற்றம். ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் தம் சவுக்கை உருவிக் கொண்டார்கள். ஆயினும் அவளைத் தண்டிக்கப் பாய்ந்த அவர்கள் திடீரெனப் பின்னடைந்து நின்றார்கள். சற்று நேரம் சிந்தனை வயப்பட்டபின் அவளை நோக்கி, "மறுமை நாளன்று இதற்குப் பிரதி செலுத்தியாக வேண்டிய அச்சம் இப்போது குறுக்கிட்டிருக்காவிடில் எத்தகைய சினத்தீயை நீ எங்களுக்கு மூட்டினாயோ அத்தகைய வேதனையையே உன் மேல் சாட்டியிருப்பேன். இனி நீ எங்களுக்கு நீ தேவையில்லை. உன்னை நான் சரியான விலை தரக்கூடியவனிடம் விற்று விடுகிறேன்" என்று கூறிய அவர்கள், "நாயனே! இவளை நான் உன்னிடமே புறஞ்சாட்டி என் அடிமைத் தளையிலிருந்து விடுவித்து விட்டேன்" எனக் கூறி அனுப்பிவிட்டார்கள்.

மார்க்க ஞானம் தேடுவதிலேயே இவர்கள் தங்கள் பொழுதைக் கழித்திருந்தாலும் நிர்வாகத் திறனிலும் சளைத்தவர்களல்லர். பஹ்ரைனிலிருந்து திரும்பிய அவர்களை, 'வருவாயாக என்ன கொண்டுவந்தீர்' எனக்கலீஃபா உமர் (ரலி) அவர்கள் வினவினார்கள். 'ஐந்து லட்சம் திர்ஹங்கள்' என அவர்கள் கூறக் கேட்டு கலீஃபா அவர்களால் தங்கள் செவிகளையே நம்ப முடியவில்லை.

"அபா ஹுரைரா! என்ன கூறுகிறீர் என்பதை உணர்ந்து தான் கூறுகிறீரா?" என கலீஃபா அவர்கள் வியப்புடன் கேட்க, "அமீருல் முஃமினீன்! நல்ல உணர்வோடேயே கூறுகிறேன்! நான் கொண்டு வந்திருப்பது ஐந்து லட்சம் திர்ஹங்கள், ஐந்துலட்சம் திர்ஹங்கள் என ஐந்து

முறை திரும்பத் திரும்பத் கூறினார்கள். எனினும் அவர்களின் திறனை மெச்சி கலீஃபா அவர்கள் மீண்டும் அவர்களை பஹ்ரைனுக்கே செல்லப்பணித்த போது இறையச்சத்தின் காரணமாக மறுத்து விட்டார்கள்.

"அமீருல் முஃமினீன்! முன்னரே தங்களின் நிர்ப்பந்தம் காரணமாகவே அதனை ஏற்றேன். அன்றி, அதிகாரத்தை நான் அறவே விரும்பவில்லை. அன்பு கூர்ந்து அதிலிருந்து என்னை விடுவித்து மகிழச் செய்யுங்கள்' என வேண்டிக் கொண்டார்கள்.

"தங்களை விடவும் மேலான ஹலரத் யூஸுஃப் (அலை) அவர்கள் ஆட்சியை விரும்பிப் பெறவில்லையா? தாங்கள் ஏன் அதனைவிட்டும் ஒதுங்குகிறீர்கள்?" என கலீஃபா அவர்கள் கேட்டார்கள்.

"ஹலரத் யூஸுஃப் (அலை) ஒரு நபியாகவும், நபியின் புதல்வராகவும் விளங்கினார்கள். அவர்களின் 'பாரம்பரியமே நபித்துவத்தால் சிறந்தது. நானோ ஏழை உமைமாவின் மகன், பஞ்சை அபூ ஹுரைரா—அறிவீனத்தால் எதையும் கூறிவிடுவேனோ, ஆதாரமற்ற தீர்ப்புகளை வழங்கிடுவேனோ என அஞ்சுகிறேன்" என்றார்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

கைபரில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் சுரம் பற்றிய சமயம் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் ஏறத்தாழ முப்பது வயதுகளைக் கடந்திருந்தார்கள். வாலிபத்தின் முறுக்கோடு அவர்கள் கைபரிலும் அதனை யடுத்து நடந்த பல போர்களிலும் பங்கேற்றிருக்கிறார்கள். கைபரிலிருந்து மதீனாத் திரும்பிய நாள் முதல் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் இறுதிக்காலம் வரையிலான ஏறத்தாழ நான்காண்டு காலமும் ஹலரத்

அபூ ஹுரைரா (ரலி) தங்கள் பொழுதை முழுதாக அண்ணலவர்களின் தோழமையில் கழித்திருக்கிறார்கள். படைக்களங்களில் மட்டுமின்றி பள்ளித் தலங்களிலும் சற்றே விலகி நின்று தங்கள் பார்வையை அண்ணலரின் பாலே குத்திட்டு நிறுத்தி அவர்களின் ஒவ்வொரு அசை வையும் கூர்ந்து கண்ணுறுவார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் இல்லங்களிலிருக்கும் காலங்களிலும் தங்கு தடையின்றிப் பழகி முற்றாக அவர்களுக்குக் குற்றேவல் புரிந்த வண்ணம் அவர்களின் அருள்வாய் உமிழும் அற போதங்களைச் செவியுறுவார்கள். கணப்பொழுதும் அவர் களைப் பிரியநேர்ந்து விட்டாலும் விரைந்து சந்தித்து இடைப்பட்ட நேரங்களில் அப்பெருமான் நிகழ்த்திய சொற் களையும் செயல்களையும் துருவி அறிவார்கள்.

அறிவுத்தாகம் கொண்டு அத்தோழர் தமக்காற்றும் பணிவிடை கண்டு அகமகிழ்ந்த அண்ணலார் (ஸல்) அவர் களும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வினவும் செய்தி களையெல்லாம் விளக்குவார்கள். அவர் வினவத்தவறும் ஞான இரத்தினங்களையும் அள்ளிச் சொரிவார்கள். அத்தகைய உறவு நெருக்கத்தாலும் அன்புப் பெருக்கா லும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் மற்ற தோழர்கள் யாவரையும் விட அதிகமான செய்திகளை அண்ணலார் (ஸல்) அவர்களிடமிருந்து அறிந்திருந்தார்கள். மாநபி (ஸல்) அவர்களின் தோழமையில் நான்காண்டு காலமே கழித்திருந்த அவர்கள் தாங்கள் நேரடியாகக் கண்டும் கேட்டும் அறியத் தவறிவிட்ட பாடங்களை ஹலரத் அபூ பக்கர், உமர், பழ்ல் இப்னு அப்பாஸ், உபை இப்னு கஅப், உஸாமா பின் ஜைத், ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) போன்ற பெரியோர்களிடம் கேட்டுக் கற்கவும் தவறவில்லை.

அத்தகைய அருள்ஞானக் கருவூலம் பதவியிலமர்ந்து அதிகாரம் செலுத்துவதில் என்ன இன்பத்தைக் காண

முடியும்? மதீனா திரும்பிய அவர்கள் மஸ்ஜிதுன்னபவீயில் அமர்ந்து மாநபி (ஸல்) அவர்களின் மணிமொழிகளை மக்களுக்குப் போதிக்கலானார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் சந்நிதானத்தில் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் பெற்றிருந்த தகுதியையும் அவர்களின் நெஞ்சம் அண்ணலரின் அருள் ஞானக் கருவூலமாய் விளங்கியதையும் ஸஹாபாக்களும் தாபிஈன்களும் நன்கறிந்திருந்தார்கள்.

"அண்ணலவர்களின் தோழர்களில் முதலிடம் பெற்றவர்களென அவர்களை நான் கூறத் துணியவில்லை. ஆனால் அண்ணலரின் அறபோதங்களை மற்ற அனைவரையும் விட அவர்களே அதிகம் நினைவு கொண்டிருந்தவர்கள்" என 'அபூ ஸாலிஹ் ஸம்மாக்' என்ற பெரியார் அறிவிக்கின்றனர்.

"அண்ணலார் (ஸல்) அவர்களிடத்தில் நாங்கள் கேட்கத் தவறிய அனைத்தையும் அபூஹுரைரா (ரலி) கேட்டறிந்திருக்கிறார். நாங்கள் கேட்டு மறந்தவைகளையும் அவர் நினைவு வைத்திருக்கிறார்" என ஹலரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) பாராட்டினார்கள்.

"நாங்கள் கேட்க அஞ்சிய பல செய்திகளையும் அவர் துணிந்து கேட்டறிந்தவர்' என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) புகழ்ந்தார்கள்.

"மனத்தயக்கங்கொண்டு நாங்கள் கேட்கப் பின்னடைந்த விஷயங்களையும் அவர் கேட்டறியத் தவறியதே யில்லை" என உபை இப்னு கஅப் (ரலி) அவர்கள் கூறினர்.

"தௌராத்தை முறையாக ஓதிக்கற்றவர்களில் அபூஹுரைரா (ரலி) அவர்களைவிட தௌராத்தை

அதிகம் அறிந்தவர்களை நான் காணவில்லை'' என கஅபுல் அஹ்பார் என்ற தௌராத்தைக் கற்றறிந்த அறிஞரே பாராட்டினார்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களே அபூ ஹுரைரா (ரலி) அவர்களை 'ஞானத்தின் பொதி' எனப் புகழ்ந்ததாக ஹலரத் அபூ ஸஈதுல் குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அவ்வாறாக நன்கு அறியப்பட்டிருந்ததன் காரணமாக அபூஹுரைரா (ரலி) ஓரிடத்தில் வந்தமர்வார்களானால் நபிமணித் தோழர்களும் அவர்களைத் தொடர்ந்தவர்களும் அவர்களைச் சூழ்ந்து கொள்வார்கள். அவர்களிடையே நாயகப் பெருந்தோழர் சொன்மாரி பொழியத் துவங்கி விடுவார்கள். அந்த நிலை மதீனாவில் மட்டுமின்றி மக்கா விலும், ஸிரியாவிலும், பஹ்ரைனிலும், கூஃபாவிலும் மலிந்தது. நன்னபியின் அத்தோழர் எங்கெங்கே பயணம் செய்தார்களோ அங்கெல்லாம் தம் சொன்னயத்தாலும் நன்னயத்தாலும் மக்களைக் கவர்ந்து நின்றனர். அவர்களின் தங்குமிடங்கள் ஒவ்வொன்றுமே ஞானக்கூடங்களாக மாறிக் கொண்டிருந்தன. பகலெல்லாம் குற்றேவல் புரிந்து பெருமான் நபி (ஸல்) அவர்களிடம் தாம் கற்ற ஞானங்களை இரவெல்லாம் விழித்திருந்து மனனம் செய்து தம் நெஞ்சக் கருவூலத்தில் பாதுகாத்த அப்புனிதர் தாம் கற்றவைகளை மற்றவர்களுக்கும் போதிக்கலானபோது ஏறத்தாழ எண்ணூறு ஸஹாபாக்களும் தாபிஈப் பெரியார் களும் அவர்கள் முன் சீடர்களாக அமர்ந்து பாடம் கேட்ட தாக இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களுக்குப்பின் தலைமை ஏற்ற ஆரம்ப கால கலீஃபாக்கள் பெருமானார் (ஸல்) அவர்களின்

திருவாய்மொழிகள் பரவலாய் அறிவிக்கப்படுவதை மட்டுப் படுத்தினார்கள். 'வஹீ'யாக வந்த வேதவசனங்கள் ஒன்று திரட்டப்பட்டுக் கொண்டிருந்த அக்காலை அண்ணலவர்களின் திருவாய் மொழிகளும் அத்திருவசனங்களோடு கலந்து விடக்கூடாது என்பதோடு. அவர்களின் அருள் வாயுரைகள் புனையப்பட்டும் புரட்டப்பட்டும் பரவிடலாகா தென்பதற்காகக் கடுந்தணிக்கை செய்தார்கள். கலீஃபா உமர் (ரலி) அவர்களின் அனுமதி பெற்றவர்களன்றி மற்ற எவரும் 'ஹதீஸ்' களை அறிவிக்கவே தடை செய்யப்பட்டிருந்தது. ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களுக்கு அதற்கான அனுமதி இருந்த போதினும் அவர்கள் மற்ற யாவரையும் விட மிக அதிகமான 'ஹதீஸ்' களை அறிவிக்கின்றார்கள் என்ற செய்தியும் கலீஃபா அவர்களை எட்டாமலில்லை. அவர்களை அழைத்து வரச் செய்த கலீஃபா, குறிப்பிட்ட ஒருநாளில் குறிப்பிட்ட ஒரு இல்லத்தில் கூடியிருந்தவர்களிடையே அண்ணலார் (ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள் என்பதை அறிவீரா' என வினவினார்கள்.

''அமீருல் முஃமினீன்! அன்றைய தினம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள் என்பதை அறிந்திருப்பதோடு இன்றைய தினம் அதனைத் தாங்கள் ஏன் கேட்கிறீர்கள் என்பதையும் உணர்வேன்' என ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறக் கேட்டு கலீஃபா அவர்கள் வியப்படைந்தார்கள்.

''அண்ணலார் (ஸல்) அவர்கள் அன்றைய தினம்' என்னைப் பற்றிய ஒரு பொய்யை மனமறிந்து கூறியவன் நரகத்தில் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொள்வானாக' என்றருளினார்கள்—என அடுத்து அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறும்போதே வெளிப்பட்ட அவர்களின் இறை பச்சத்தைக் கண்ட உமர் (ரலி) அவர்கள் 'நீர் தாடும்

போதெலாம் 'ஹதீஸ்'களை மக்களுக்கு எடுத்துச் சொல்வீராக; நாடும் அளவுக்கு வெளிப்படுத்துவீராக. உம்மை நான் தடுக்கவில்லை" என அனுமதி வழங்கினார்கள்.

அண்ணலவர்களின் தோழர்கள் யாவரையும் விட அதிகமாக ஹதீஸ்களை அறிவித்தார்களானாலும் ஹலரத் அபூஹுரைரா (ரலி) பெருமைக்காகவோ புகழுக்காகவோ அவ்வாறு செய்யவில்லை. தவறிழைத்து நரகத்துள் நுழைந்து விடுவோம் என்ற அச்சத்தால் மற்றவர்கள் தங்கள் நாவுகளை அடக்கிவைத்த போது தாங்கள் கொண்ட அச்சத்தையும் அவர்கள் வெளியிடுகிறார்கள். "நேர்வழியையும் தெளிவான அத்தாட்சிகளையும் நாம் அருளி அவற்றை மனிதர்களுக்காக வேதத்தில் தெளிவு படுத்திக் கூறிய பின்னரும் எவர்கள் அவற்றை மறைக்கின் றார்களோ அவர்களை நிச்சயமாக அல்லாஹ்வும் சபிக்கின் றான் (மற்றும்) சபிக்கின்றவர்களும் சபிக்கின்றனர். என்ற (2:159) இறைவசனம் இறங்கியிராவிடில் நான் எதையுமே அறிவித்திருக்க மாட்டேன்" என்று.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் கூறாத எந்த ஒரு சொல்லையும் தாம் கூறிவிடக் கூடாதென்ற அச்சம் அவர்களுக்கும் இல்லாமல் இல்லை. அந்த அச்சம் ஒரு புறமும் அண்ணலவர்களின் வாக்கையும் வாழ்வையும் அறிவித்து மக்களை அதன்படி பேணி ஒழுகச் செய்ய வேண்டுமென்ற ஆவல் மறு புறமுமாக இணைந்து அவர் களின் நினைவாற்றலை மேலும் வலுப்படுத்தின. ஒரு முறை ஆயிஷா நாயகியாரின் குடிலருகே அமர்ந்து அற போதம் வழங்கி முடித்த அவர்கள் குடிலினுள் திரும்பி "உம்முல் மூஃமினீன்! என் கூற்றில மாற்றப்படவேண்டி யவைகள் ஏதேனும் உளவோ!" என வினவினார்கள்.

அபூ ஹுரைரா (ரலி) அண்ணலவர்களின் போத
களை சொல் பிறழாமல் கூறுவதாக ஏற்ற அன்னை
ஆயிஷா (ரலி) 'ஆயினும் சில போதங்கள் வெளிப்பட்
காரணச் சூழல்களை அவர் அறிந்திருக்கவில்லை' என்
மட்டுமே கூறித் தாம் அவற்றை விளக்கியதாக இப்
அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களிடத்தி
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கொண்டிருந்த பே
தலையும் மரியாதையையும் விளக்க வந்த இமாம் ஹஸ
(ரலி) அவர்கள்,

''ஒரு முறை ஹலரத் அபூஹுரைரா (ரலி) எங்களுக்
ஹதீதுகளைப் போதித்துக் கொண்டிருக்கையில், 'சந்
ரனையும் சூரியனையும் மறுமை நாளன்று ஒளியிழக்
செய்யப்பட்டு இரண்டிரண்டு துண்டுகளாக்கி நரகில் வீ
யெறியப்படு'மெனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி
தாகக் கூறினார்கள். நான் அப்போது எழுந்து 'அவைக
செய்த எந்தப் பாவங்களின் காரணமாக' என்று கேட்டே
ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் முகம் அ
கணமே சிவந்து விட்டது. கடுமையான குரலில், 'அண்ண
எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருள் மொழிகளை நா
கூறிக்கொண்டிருக்கிறேன். நீங்கள் காரணம் கேட்கிறீர்க
ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் அவைகளைக் கூற
கேட்டபோது அவைகளுக்கான காரணங்களைக் கேட்
எங்களுக்குத் தேவைப் படவில்லை. அவர்கள் கூறிய
எங்களுக்கு போதுமானதாயிருந்தது' என்றார்கள். அவ
களது குரலின் கடுமையைக் கண்டு நான் அமைதியுட
இருந்து விட்டேன்'' என்று கூறுகிறார்கள்.

ஒரு சமயம் மறுமையைப் பற்றிய அண்ணல் எம் பெ
மான் (ஸல்) அவர்களின் அறிவுரை ஒன்றைக் கூற
துவங்கிய அவர்கள்,

"நபி பெருமான் (ஸல்) கூறிய செய்தி யொன்றை நான் உங்களுக்கு அறிவிக்கின்றேன். அவர்கள் இதனைக் கூறும் போது நான் மட்டுமே அவர்களிடம் இருந்தேன்" எனக் கூறியதுமே திடுக்கங் கொண்டு மயக்கமடைந்தார்கள். உணர்வு மீண்டவுடன் திரும்பவும் பேசத் துவங்கிய அவர்கள் மேற்கண்டவாறு கூறி மறுபடியும் மயக்கமுற்றனர். இவ்வாறாக மும்முறை மயக்கமுற்ற அவர்கள் ஒருவாறாகத் தங்களை நிதானப்படுத்தி, கூற நினைத்ததைக் கூறவே துவங்கினார்கள்.

"மறுமை நாளன்று இறைவன் விசாரணையைத் துவக்கும் போது அவன் முன் எல்லோருக்கும் முன்னதாக மூவர் அழைத்து வந்து நிறுத்தப்படுவர்.

1. குர்ஆனை நன்கு கற்றுணர்ந்த ஓர் ஆலிம்,

2. இறைவனின் பாதையில் கொல்லப்பட்ட ஒரு தியாகி,

3. பொருள் வளம் அருளப் பெற்ற ஒரு சீமான் ஆகியோரே அம்மூவர்.

இறைவன் முதலாவதாக குர்ஆனைக் கற்றுணர்ந்த அந்த அறிஞரை நோக்கி "நான் உனக்குத் திருக்குர் ஆனின் ஞானத்தை அருள் புரிந்தேனல்லவா?" எனக் கேட்பான்.

"ஆம்" என்பார் அந்த ஆலிம்.

"நீ அதனை எவ்விதம் பயன் படுத்தினாய்?" என இறைவன் கேட்பான்.

அதற்கு அந்த அறிஞர், "என் இறைவா! நான் இரவும் பகலும் அதனை உனக்காகவே ஓதி வந்தேன்" என்று கூறுவார்.

உடனே இறைவன் அதனை மறுத்து, "நீ பொய்யு ரைக்கிறாய். உலகில் மக்கள் உன்னைத்—திருமறையைத் திருத்தமாக ஓதத் தெரிந்த—அழகிய 'காரி' எனப் புகழ வேண்டுமென்பதற்காகவே நீ ஓதினாய். அவ்வாறே நீ உலகில் அழைக்கவும் பட்டாய்" என்பான்.

அடுத்து அந்தத் தியாகியைநோக்கி இறைவன், "நான் உனக்கு ஆற்றலையும் ஆண்மையையும் அருள் புரிந்தேனல் லவோ!" எனக் கேட்பான்.

"ஆம் இறைவா!" என்பார் அவர்.

"அதனை நீ எவ்விதம் பயன் படுத்தினாய்!" என இறைவன் கேட்பான்.

"இறைவா! நான் உனக்காகவே போர் புரிந்தேன், உன் பாதையிலேயே கொல்லப்பட்டேன்" என்று அவர் கூறுவார்.

அதனை மறுத்து இறைவன், "நீ பொய்யுரைக்கிறாய். மக்கள் உன்னை பெரும் வீரனென்றும் தியாகி என்றும் புகழ வேண்டும் என்பதற்காகவே நீ போராடினாய். உலகில் அவ்வாறே நீ புகழவும் பட்டாய்" எனக் கூறுவான்.

மூன்றாவதாக இறைவன் அச்சீமானை நோக்கி "நான் உனக்கு செல்வத்தைத் தந்து, மக்கலளைக் கொண்டு எவ் விதத் தேவையுமற்றவனாக உன்னை ஆக்கிவைத்தும், நீ அச்செல்வத்தை எவ்வழியில் பயன்படுத்தினாய்?" என்று கேட்பான்.

"என் இறைவா! ஏழைகளிடம் நான் இறக்கம் காட்டினேன். நீ தந்த செல்வத்தை உனக்காக வேண்டியே நான் அவர்களுக்கு அள்ளி அள்ளித் தந்தேன்" என அச் சீமான் கூறுகையிலேயே இறைவன் இடைமறித்து "நீ

பொய்யுரைக்கிறாய். உலக மக்கள் உன்னைப் பெரும் வள்ளல் எனப் புகழ வேண்டுமென்பதற்காகவே அவ்வா றெல்லாம் நீ செய்தாய். உலகில் நீ அவ்வாறே புகழவும் பட்டாய்'' எனக் கூறிய பின்னர் தன் வானவர்களை விளித்து, "இழுத்துச் செல்லுங்கள் இவர்களை எரி நரகிற்கு!'' எனக் கட்டளையிடுவான்.

இச்செய்தியை கூறி முடிக்கையில் அண்ணல் எம்பெரு மான் (ஸல்) அவர்கள் என் தொடையைத் தட்டி "அபா ஹுரைரா! அனைவருக்கும் முன்னதாக இம்மூவரைக் கொண்டே நரகம் எரிமூட்டப்படும்'' என்றுரைத்தார்கள்.

—பேசி முடித்த ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர் களின் உடல் அதற்குள் வியர்வையால் தொப்பலாடி யிருந்தது.

மதீனாவின் கடைத் தெருவில் ஒரு நாள் மக்களைச் சந்தித்த அவர்கள் "மக்களே! மாநபி (ஸல்) அவர்களின் உடைமைகள் அங்கு பங்கிடப்படுகின்றன. இங்கு உங்களைத் தடுத்து வைத்திருப்பது எது?'' என வினவி னார்கள்.

"அபா ஹுரைரா! எங்கே பங்கிடப்படுகின்றன?'' என வினவினர் மக்கள். "மஸ்ஜிதுன் னபவீயில்'' என அவர்கள் கூறக்கேட்டு மக்கள் விரைந்தனர் மாநபியின் பள்ளி நோக்கி.

அங்கே ஒரு சாரார் திருமறைய ஓதிக் கொண்டிருந் தார்கள். மறு சாரார் மாநபியின் வழிமுறையை ஆய்ந்துக் கொண்டிருந்தார்கள் பிரிதொரு சாரார் பேரிறையை வழுத்திக் கொண்டிருந்தார்கள். அவைகளைக் கண்ணுற்ற வண்ணம் நின்றிருந்த மக்களிடையே அபூஹுரைரா (ரலி) அவர்களும் வந்தடைந்தார்கள்.

“அபூஹுரைரா! அண்ணலார் (ஸல்) அவர்களின் உடைமைகள் பங்கிடப்படுவதாக உரைத்தீரே எங்கே?” என வினவிய மக்களை நோக்கி, “அந்தோ! உங்களின் கேடே! இவைகளை விடப் பெரிதாய் என் ஏந்தலரின் உடைமைகளாய் எதைத்தான் நினைக்கிறீர்கள்?” என வியந்தார்கள் அத்தோழர்.

காலச் சுழற்சியினூடே உலகம் கொண்ட மாறுபட்ட கோலம் அவர்களையும் வருத்தவே செய்தது. நேரிய வழிகாட்டப் பெற்ற கலீஃபாக்கள் நால்வரின் காலத்திறகுப் பின் அதிகாரத்திலமர்ந்தவர்களின் டாம்பீக வாழ்க்கை சாதாரண மக்களின் வாழ்க்கை நடைமுறையிலும் விளைவித்த அலட்சிய மாறுதல்களைக் கண்டிக்கவும் அவர்கள் தவறவில்லை. தடம்புரண்ட ஆளுநர், அதிகாரிகள், படைவீரர்கள் குடிமக்கள் எவருமே அவர்களின் கண்காணிப்பிலிருந்து தப்பியதில்லை.

அத்தகைய கண்காணிப்பில் கசப்புணர்வு கொண்ட மர்வான்—மதீனாவின் ஆளுநர்—மக்களிடையே அவர்களின் கண்ணியத்தைக் குறைக்கத் திட்டமிட்டபோது அவரை எதிர்க்க எத்தகைய தயக்கமும் கொள்ளவில்லை ஹலரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள். அதிகமான ஹதீஸ்களை அவர்கள் அறிவிப்பதைப் பற்றி ஐய வித்துக்களை மர்வான் தூவியபோது அதற்குப் பதிலுரைத்து ஹலரத் அபூஹுரைரா (ரலி) பகிரங்கமாகப் பேசினார்கள்.

“ஆண்டவன் மீதாணையாக இக்கால மக்கள் யாவரையும் விட நான் ‘ஹதீஸ்’களை அதிகம் அறிந்தவனாகவே இருக்கின்றேன். எனக்கு முன்னரும் அனேகர் அண்ணலார் (ஸல்) அவர்களின் தோழமையைப் பெற்றிருக்கின்றனர். அத்தோழமையை ஏற்க அநேகர் தங்களின் வீடு வாசல்களைத் துறந்தும் இருக்கின்றனர். அநேகர் அவர்களின்

உதவியாளர்களாய் இருந்திருக்கின்றனர். பின்னும் நான் இறைவன் மீதாணையிட்டுக் கூறுவேன். 'அண்ணலரின் அறபோதங்களை நானே அதிகம் அறிந்தவன் என்று.

கண்ணிமைக்கும் நேரமும் அப்புனிதத் தோழமை யைப் பிரிந்திருக்க ஒப்பாதவன் நான் என்பதை உலகம் அறிந்திருக்கிறது. உமர், உதுமான், அலீ, தல்ஹா, ஸுபைர் (ரலி) போன்ற பெரும் நபித்தோழர்களும் கூட என்னிடம் 'ஹதீஸ்'களைக் கேட்டறிந்தார்கள். அண்ண லார் (ஸல்) தங்களின் மதீனத்து வாழ்க்கையில் நடந்த ஒவ்வொரு வழியையும் நான் அறிவேன். அவர்கள் தங்கள் மவுனத்தால் அனுமதித்த ஒவ்வொரு செயலையும், அவர் கள் கண்டு பொருத்தங் கொண்ட ஒவ்வொரு நடவடிக் கையையும் நான் கூறுவேன். ஆண்டவனின் தூதரின் சந்நிதானத்தில் எவரெவரது தகுதி எத்தகையதாயி ருந்தது என்பதையும் நான் அறிவேன். அவர்களின் துணைவர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் நானறிவேன். அபூ அப்துல் மலிக் (மர்வான்) போன்ற எத்தனையோ பேர்கள் என்னிடம் அறிவைத் தேடுகிறார்கள். அவர் களுக்கு என்ன ஐயம் ஏற்படுகிறது? நான் அண்ணலார் (ஸல்) அவர்களின் அறிவுரைகளைக் கொண்ட ஒரு கருவூல மாவேன்" என வாயாப்பளித்த அவர்களின் வன்மை கண்டு மர்வான் மவுனியானார்.

"நான் உளமார்ந்து இஸ்லாத்தை ஏற்றேன். மனமொப்பி என் நாட்டைத் துறந்து அண்ணலவர்களை வந்தடைந்தேன். என் நேசத்தையும் பாசத்தையும் அவர் கள் பால் சொரிந்தேன். நீங்களோ அத்தூதரின் குடும்பத் தையே சார்ந்திருந்தீர்கள். அவர்களின் முதற்குரல் எங்கே ஒலித்ததோ அந்தப் பூமியைச் சேர்ந்தவர்களாகவே இருந் தீர்கள். எனினும் அச்சத்தியச் சித்தரை அவர்கள்

பிறந்த மண்ணைத் துறந்து செல்ல நிர்ப்பந்துப் படுத்தினீர்கள். அவர்களின் தோழர்களையெல்லாம் துன்புறுத்தினீர்கள். உங்கள் உயிர்களை உலைவு சூழ்ந்து, ஓடித் தப்பிக்க வழியற்ற போதே நீங்கள் இஸ்லாத்தை ஏற்றீர்கள்'' என்ற அவர்களின் [வசைமாரி கேட்டுத் தலை குனிந்த மர்வான் பின்னர் அவர்களின் மரணகாலம் வரை அவர்களைக் கண்ணியப்படுத்தியே வந்தார்.

மர்வான் ஹஜ்ஜுக்காகவோ வேறு காரியங்களுக்கோ மதீனாவை விட்டும் வெளிச் செல்ல நேர்ந்த சந்தர்ப்பங்களில் அவர்களையே தம் பொறுப்பில் அமர்த்திச் செல்வார். ஆயினும் அச்சமயம் உலக வாழ்க்கையில் அவர்கள் மிக வெறுப்புற்றவர்களாகவே இருந்து வந்தார்கள்.

5374 நபி மொழிகளை உலகத்தாருக்கறிவித்த அப் பெரியார் ''நான் என் ஏந்தலார் (ஸல்) அவர்களின் திருவாய் மொழிகளை ஐந்து மூட்டைகளாகப் பாதுகாத்து வந்திருக்கிறேன். அவற்றுள் இரண்டையே நான் வெளிப் படுத்தியுள்ளேன். மூன்றாவதை நான் அவிழ்த்தேனானால் நீங்கள் என்னைக் கல்லாலடித்துக் கொன்று விடுவீர்கள்'' எனக் கூறினார்கள். அதன் மூலம் மார்க்க ஞானிகளும் ஸூஃபிய்யாக்களுமே அறிந்திருக்கவேண்டிய பல இறை ஞான இரகசியங்களையும் எதிர் கால முன்னறிவிப்புகளையும் அவர்கள் அறிந்திருந்தார்கள் என்பது புலனாகிறது. எனினும் காலம் அப்போதடைந்திருந்த குழப்ப நிலையைக் கண்டு அவர்கள் அவைகளைப் பகிரங்கப் படுத்தத்த தவிர்த்துக் கொண்டனர் போலும்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பின் மூலம் எதிர்கால உலக அலங்கோலங்களையும் தோன்றவிருக்கும் நாசகார சக்திகளையும் உள்ளுணர்ந்திருந்த அவர்கள், ''இறைவா! ஹிஜ்ரி 60ம் ஆண்டின்

ஆரம்பத்தை விட்டும், இளைஞர்களின் ஆட்சியைவிட்டும் உன்னிடம் பாது காவல் தேடுகிறேன்" என இறைஞ்சி வந்தார்கள். அதன்படியே அவர்கள் ஹிஜ்ரி 59ம் ஆண்டி லேயே மரணித்துவிட்டார்கள்.

நோய்வாய்ப் பட்டிருக்கையில் பலரும் அவர்களைக் காண வந்தனர். அவர்களுக் கெல்லாம் அவர்கள் நன் மையை ஏவி காலத்தின் தீங்குகளை விளக்கி உலக மாயத்தில் மூழ்காதிருக்க எச்சரித்தார்கள்.

அபூ ஸலமா அப்துர் ரஹ்மான் என்பவர் அவர்கள் நலமடையப்பிரார்த்தித்த போது குறுக்கிட்ட இவர்கள், "இறைவா! இனியும் என்னை இந்த உலகில் வாழ விட்டு வைக்காதே'' என இரு முறை இறைஞ்சினார்கள். பின்னர் அவரை நோக்கி "அபூ ஸலமா! மரணம் உம்மைவ சப்பட்டதாயிருக்குமானால் நீர் மரணித்து விடுவதே மேலாகும். ஆண்டவன் மீதாணையாக அறிவுடையோர் மரணத்தைத் தங்கக் குவியலையும் விட மேலாக விரும்பும் காலத்தை மிக நெருக்கமாகவே நான் காண்கிறேன். அக் காலத்தில் மண்ணறையைக் காணும் ஒரு முஸ்லிம் அது தன்னுடையதாகவே இருந்திருக்கலாகாதா என ஏங்குவார். நீரும் அன்று உயிரோடிருந்தால் அப்படித்தான் எண்ணு வீர்" என உபதேசித்தார்கள்.

மர்வானும் அவர்களைக் காண வந்திருந்தார். "இறைவா! அபூ ஹுரைரா (ரலி) அவர்களை நலம் பெற் றெழச் செய்தருள் என அவர் இறைஞ்சினார்.

உடனேயே அபூ ஹுரைரா (ரலி) அவர்கள், "என் இறைவா! உன்னைச் சந்திப்பதேயன்றி வேறெந்த ஆவலை யும் நான் கொண்டில்லை. அந்த என் ஆவலை நிறை வேற்றியருள்" என இறைஞ்சினார்கள். அவர்களிடமிருந்து விடைபெற்று வெளியேறிய மர்வான் தன் வாகனத்தில்

அமரவுமில்லை. அதற்குள்ளாகவே நபிமணித் தோழர் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் ஆன்மா பிரிந்த செய்தி அவரிடம் கூறப்பட்டது. அச்சமயம் அவர்களின் வயது ஏறத்தாழ 82க்கும் மேலாக இருந்தது. அப்போதைய மதீனாவின் ஆளுநரான வலீத் பின் உத்பா பின் அபீ ஸுஃப்யான் தொழுகை நடத்தினார். ஹஸரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அபூ ஸஈதல் குத்ரி (ரலி) போன்ற மாநபித் தோழர்களும் ஹஸரத் உதுமான் (ரலி) அவர்களின் மக்களும் சுமந்து சென்று புனித உடலை பகீஃஇல் அடக்கம் செய்தார்கள். ஸிரியாவிலிருந்த ஆட்சித் தலைவர் முஆவியா (ரலி) அவர்களுக்கு அபூஹுரைரா அவர்களின் மரணச் செய்தி அறிவிக்கப்பட்டது. கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் இறுதிக்காலத்தில் அவர்களுக்கு உதவ இவர்கள் விரைந்ததை நினைவு கூர்ந்து அவர்களின் மக்களுக்கு பதினாயிரம் திர்ஹங்கள் வழங்கவும் அவர்களை நன்கு உபசரிக்கவும் கட்டளையிட்டார்கள் ஹஸரத் முஆவியா (ரலி).

இறப்பின் இறுதித் தறுவாயில் ஹஸரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வெகுவாகக் கண்ணீர் விட்டழுதார்கள். திரு நபியின் பல்லாயிரம் திரு மொழிகளைத் தம் நெஞ்சத்தில் தாங்கி உலவிய அப் பெருந்தோழர் மரணத்தின் மடியில் ஏன் கண்ணீர் வடிக்க வேண்டும் என வினவப் பட்ட போது ''மரணத்துக்கு அஞ்சி நான் அழவில்லை. இதோ நான் புறப்படுகிறேன். பயணமோ நெடுந் தொலை கொண்டதாய் தெரிகிறது. கட்டுணவோ மிகக் குறைவாகவே உள்ளது. இறுதியில் நான் சென்று சேருமிடம் தான் எங்கே? சுவனத்திலா? நரகத்திலா? எனப் புரியாமலேயே அழுகின்றேன்'' என்றார்கள் ஹஸரத் அபூ ஹுரைரா (ரலி).

தமது உடலை விரைந்து மண்ணறையில் சேர்ப்பித்திட வேண்டும் எனப் பணித்த அப்பெருந்தோழர் அதற்குக் காரணமாக "நல்லடியாரின் பிரேதம் மண்ணறையில் என்னை விரைந்து சேர்ப்பியுங்கள் என்று கூறும். தீய வனின் ஆன்மா ஐயகோ! என்னை எங்கே இழுத்துச் செல்கிறீர்கள் என்று அலறும்" என்ற அண்ணலரின் பொன்னுரையையே கூறினார்கள்.

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் தங்களுக்குப் பின் மஹ்ரூர், அப்துர் ரஹ்மான், பிலால் என்ற மூன்று ஆண் மக்களையும் ஒரேயொரு பெண் மகவையும் தங்கள் வழிவாறுகளாய் விட்டுச் சென்றார்கள்.

"அண்ணலவர்களின் 'ஹதீஸ்'களை அபூ ஹுரைரா (ரலி) அவர்களைவிட அதிகமாக மனனஞ் செய்தவர் எவரு மில்லை" என்றும் இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் குறிப் பிடுகிறார்கள்.

"மாபெரும் நினைவுக் களஞ்சியம்" என அவர்களை இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்கள் புகழ்கிறார்கள்.

புகாரீ, முஸ்லிம், அபூ தாவூத், திர்மிதீ, நஸாயீ, இப்னு மாஜா ஆகிய 'ஹதீஸ்'களின் அறுபெருந்திரட்டு களன்றி இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் முஅத்தா, இமாம் அஹ்மது (ரஹ்) அவர்களின் முஸ்னத் போன்ற மற்றெந்த திரட்டிலும் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்புகள் காணப் படாதில்லை.

மாநபியின் பல்லாயிரம் திரு மொழிகளைத் தம் நெஞ்சக் கருவூலத்தில் பாதுகாத்த அத் திருத்தோழரின் பெயர் இன்றும் வாரந்தவறாது பசுமையுடன் நினைவு கூரப்படுகிறது. வெள்ளிக் கிழமையன்று ஜும்ஆப் பேருரையாற்ற இமாம் மேடையில் ஏறு முன் முஅத்தினின் குரல் பள்ளிகள் தோறும் ஒலிக்கின்றது.

''இஸ்லாமியப் பெருமக்களே! அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக. 'உரையாற்றுவர் மேடையில் ஏறியபின் உங்களில் எவரும் பேசலாகாது. அவ்வாறு பேசினவர் அ(வ்வுரை)தனைப் பழுதாக்கி விட்டார். அவ்வாறு பழுதாக்கியவருக்கு ஜும்ஆ (வுடைய நன்மைகள்) கிடையாது என்று அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதை மாலிக் (ரஹ்) அறிவிக்கிறார்கள்'' என்று.

பெருமான் நபி (ஸல்) அவர்களின்பால் கொண்ட பேரன்பால் புகழ் மணக்கப் பெற்ற ஹழரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் பால் அல்லாஹ் பொருத்தங்கொண்டருள் வானாக.